# செல்ல மகள் செல்வி

(சிறுகதைகள்)



கொல்வால் எச். ஜோஸ்

# செல்ல மகள் செல்வி

**(சிறுகதை தொகுப்பு)**

*கொல்லால் எச். ஜோஸ்*

*மின்னஞ்சல் -joseharichandran@gmail.com*

*வகை – அனுபவம்*

*வெளியீடு : த.ஸ்ரீனிவாசன்*
*http://FreeTamilEbooks.com*

*மின்னஞ்சல் - tshrinivasan@gmail.com*



## வணக்கம்,

வாசித்தால் வளரலாம் உண்மை தான் . நான்கு ஆண்டுகளுக்கு முன்பு 'பொன்னியின் செல்வன்' நாவலைத் தான் பள்ளிப் பாடம் தவிர்த்து நான் முதன் முதலாக வாசித்தேன். அதன் பிறகு வாசித்தல் என்பது வாழ்வின் ஒரு பகுதி என்றே ஆனது.

எழுத்து முகநூல் எனும் சமூக வலைதளத்தினூடே அறிமுகமானது. முகநூலில் எழுதிய சிறுகதைகளை என்னுடைய முதல் மின்னூலாக தொகுத்துள்ளேன்.

முகநூலில் தொடர்ந்து கிடைத்த ஊக்கங்களே எனை மின்னூல் எனும் அளவிற்கு அழைத்து வளர்த்து கொண்டு வந்திருக்கிறது. எனது முகநூல் நண்பர்கள்

அத்தனை பேருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகளை இங்கு எழுதி வைக்கிறேன்.

இந்த மின்னூல் தளத்தில் எழுதிய தன்னுடைய மின்னூல்களின் வாயிலாக என் நெஞ்சு நிறைந்த என் நேசத்திற்குரிய எழுத்தாளர் ஜோதிஜி . திருப்பூர் சாரையும் அன்பொழுக நினைவு கூருகிறேன் . இந்த மின்னூல் ஆக்கத்திற்கு உதவிய அவரது ஆலோசனைகளும் வழிகாட்டுதலும் எப்போதும் என் நெஞ்சில் நிற்கும். அவரது எழுத்திற்கு எப்போதும் நான் ரசிகன் அப்படியே என் நன்றியை அவருக்கு கூறிக்கொள்கிறேன்.

இந்த மின்னூலை நீங்கள் இருக்கும் இடங்களுக்கே உங்கள் கரங்களுக்கே கொண்டு வந்து சேர்க்க உதவிய சீனிவாசன் சாரையும் , இக்குழுமத்தில் அவருடன் இணைந்து எவ்வித லாப நோக்கும் இல்லாமல் சேவை மனதோடு உழைக்கும் சகோதர , சகோதரிகளுக்கும் என் அன்பையும் நன்றியையும் இங்கு எழுதி வைக்கிறேன்.

என்னுடைய இந்த முதல் மின்னூலை என்னுடைய தமிழாசிரியர் திரு. அருளானந்தம் சார் அவர்களுடன், என்னுடைய முகநூல் உறவுகளான சகோதரர் திரு . ஹமீத் அலி பாய் அவர்களுக்கும், பொன்னையா ராசா அண்ணா அவர்களுக்கும், சுள்ளான் சார் அவர்களுக்கும் நன்றியுடன் காணிக்கையாக்குகின்றேன்...

அன்புடன்,

கொல்லால் எச். ஜோஸ்

*17 - 6 - 2018*

Jose harichandran<joseharichandran@gmail.com>

# உள்ளடக்கம்

## 1. அம்மா...

ராஜுவின் மொபைல் சிணுங்கும் சத்தம் கேட்டது எடுத்துபார்த்தால் அழைப்பது மனைவி யமுனா . அழைப்பை ஏற்று காதில் வைத்தால் சூடான எண்ணெய்ல் போட்ட கடுகு போல வெடிக்க தொடங்கிவிட்டாள்.

காரணம், பெரிதாக எதுவும் இல்லை வழக்கமாக ஆண்கள் செய்யும் தவறு தான். அவளிடம் கேட்காமல் இவனுடைய அம்மாவிற்கு ஐயாயிரம் ரூபாய் கொடுத்து விட்டான் அது தான் இப்போதைய இச்சண்டைக்கும் அவள் கோபத்திற்கும் காரணம்.

அவள், “உங்க அம்மாவிற்கு மூன்று வேளையும் சாப்பாடு நாம் தான் கொடுக்கிறோம். எதாவது உடல் நிலை சரியில்லையென்றால் மருத்துவரிடம் கொண்டு செல்கிறோம். அவர்களுடைய பென்சனை பற்றி எதுவும் நாம் கேட்பதில்லை பிறகு எதற்காகவாம் காசு?” என்றாள் கோபமாக.

ராஜு பொறுமையாக சொன்னான் “எல்லாம் சரிதான் யமுனா அம்மா ஒரு ரூபாய் கூட வீணடிப்பவர்கள் அல்ல. அதுமட்டுமல்ல அவர்களிடம் ஏன்? எதற்கு? என நான் எப்போதும் கேட்டதில்லை . கேட்டால் அவர்கள் மனது வருத்தப்படும் என்றே கேட்பதில்லை கேட்க வேண்டிய அளவுக்கு அம்மாவும் நடந்து கொண்டதில்லை.” அதை தொடர்ந்து தந்தை இன்றி

தன்னம் தனியாக அவர்கள் அவனை வளர்க்க பட்ட கஷ்டத்தை எல்லாம் விளக்கி பார்த்தான்.

அவள் எதையும் கேட்க தயாரில்லை.

அலுவலகத்தில் ஆயிரம் பேர் என்றாலும் அசால்டாக அதட்டி அவனுக்கடங்கி வேலை செய்ய வைப்பவன் அதட்டல், அவன் மனைவி யமுனாவிடம் மட்டும் எடுபடுவதில்லை. அதட்டி அடிபணிய வைக்க முடியாதேயொழிய அன்பால் அவளை அடிபணிய வைக்க முடியும்.

ஒரு வழியாக இம்முறையும் பிரச்சனை முடிவுக்கு வந்தது. வழக்கம் போல் அவளே ஜெயித்தாள் அவள் சொன்னாள் "எனை கேட்காமல் இனி ஒரு ருபாய் கூட உங்க அம்மாவுக்கு நீங்க குடுக்க கூடாது." அவனும் அதற்கு ஒத்துக்கொண்டான்.

பதிலுக்கு "இப்போ கொடுத்த காசைபற்றி நீயும் அம்மாவிடம் எதுவும் கேட்க கூடாது" என்றான்.

அவளும் "சரி" என்றாள்.

இன்பமாக அவர்கள் இல்லற வாழ்க்கை நகர்ந்துகொண்டிருந்தது. சில நாட்களுக்கு பிறகு வேலைக்கு போய் வந்த ராஜுவின் மொபைலில் பத்துக்கும் மேற்பட்ட மிஸ்டுகால்கள் வந்து கிடந்தது. பார்த்தவன் பயந்தே போனான் . நெஞ்சு பட படவெனன அடித்துக்கொண்டது. வெளிநாட்டில் வேலை செய்து கொண்டிருப்பவனல்லவா . பள்ளி சென்ற குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்று காலையில் தான் சொல்லியிருந்தாள் யமுனா . அம்மாவும் வர வர உடம்புக்கு ரொம்ப முடியலடா எப்போ ஊருக்கு வர போறேன்னு கடைசிய பேசின நேரம் கேட்டிருந்தாங்க.

யாருக்கு என்ன ஆயிற்றோ? அல்லது வேறு எதேனும் பிரச்சனையா? காலையில் தானே வீட்டிற்கு

பேசினேன். மகளின் பிறந்தநாளுக்கு வாழ்த்துக்களையும் சொல்லியாயிற்றே என்னவாக இருக்கும் உள்ளுக்குள் ஆயிரம் கேள்விகள் ஒருவித இனம்தெரியா பயத்தோடே டயல் செய்தான் யமுனாவிற்கு

போனை எடுத்தவளால் பேசமுடியவில்லை . அவள் தடுமாறுவதை பார்த்ததும் பயத்தின் உச்சிக்கே சென்றான் ராஜு . சிறிது சுதாரித்துக்கொண்டு நா தழுதழுத்த குரலில் பேசினாள் யமுனா "நம்ம மகளுக்கு பிறந்தநாள் பரிசாக உங்க அம்மா ஒரு பவுன் செயின் ஒன்றை போட்டாங்க ... அன்னைக்கு நான் உங்க அம்மாவை புரிஞ்சுக்காம பேசினதுக்கு என்னை மன்னிசிடுங்க" என்றபடி அவன் பதிலுக்கு காத்திராமல் போனை துண்டித்தாள் . அவனும் அதைக்குறித்து அவளுடன் ஒன்றும் பேசவில்லை தன் கண்களை துடைத்துக்கொண்டான் . பயத்தில் பேச துவங்கியவன் ஆனந்தத்தோடே அழுதுகொண்டே போனை வைத்தான்.

அவன் படித்த அம்மாவை இப்போது அவளும் படிக்க தொடங்கிவிட்டாள் இனி புரிந்து கொள்வாள் யமுனாவும் ராஜுவின் அம்மாவை...

## 2. மண முறிவிற்கு பின் மனம்...

மணமுறிவு சான்றிதழ் கையில் கிடைத்ததும் "தன்னை பிடித்திருந்த அடிமை விலங்கொன்று உடைந்ததாக அனுவும்..." "தன்னை பிடித்திருந்த தொல்லை ஒன்று தன்னை விட்டகன்றதாக விக்னேசும் ..." நினைத்து முறுவலித்துக்கொண்டு நீதிமன்றத்தை விட்டு வெளியே வந்தனர். ஒருவர் முகத்தை இன்னொருவர் பார்த்துக் கொள்ளவும் விரும்பவில்லை அவர்கள்.

"இனி வாரத்துக்கு ஒரு முறை தண்ணியடிக்க அனுமதி... தினம் ஒற்றை சிகரெட் குடிக்க தான் அனுமதி..'' எனும் தொல்லைகளிலிருந்து விடுபடலாம் என விக்னேசும்,

"இனி எங்கு சென்றாலும் யாரிடமும் கேட்க தேவையில்லை. விரும்பிய ஆடைகள் அணிந்து கொள்ளலாம். கட்டுபாடுகள் விதிக்க ஆளில்லை ." மனம் போல் மகிழ்ச்சியாய் வழலாம் எனும் எண்ணத்தோடு அனுவும் பிரிந்து சென்றனர்.

சிறையிருந்த கூட்டைவிட்டு வானமே எல்லையென பறந்து செல்லும் பறவை போல விரும்பி விலகிச் சென்றனர்.

காலச்சக்கரம் வழக்கம் போல் வேகமாக சுழன்று கொண்டிருந்தது. சில மாதங்களுக்கு பின் கட்டுப்பாடில்லாத வாழ்க்கை அவர்களுக்கு கசக்க துவங்கியது. எது இன்பம் என்று நினைத்தார்களோ அதில் இன்பத்தை விட்டு துன்பத்தை காணத்துவங்கினார்கள்...

வீட்டில் காணும் இடத்திலெல்லாம் அவள் தெரிய துவங்கினாள். நீதிமன்ற உத்தரவு படி வீட்டை விட்டு சென்றவள். என்ன தான் உதறித்தள்ளியும் தன் நினைவுகளை விட்டகலமறுத்தாள்...

அவன் தான் பிரச்சனை என்று எண்ணியவளுக்கு இப்போது அவன் இல்லாததே பெரும் பிரச்சனையாகி போனது. பேப்பர் காரன் முதல் எதுத்த வீட்டு தாத்தாவின் பார்வை வரையில் மாற்றத்தை உணரலானாள். அக்கா என்றழைத்தவனும் பாசத்திற்கு பதில் பாசாங்கு காட்டினான் . ஆன்டி என்றவனும் ஆபாசமாய் பார்க்கிறான். இதுவரை முகத்தை பார்த்து பேசியவன் பார்வை கழுத்து கீழிறங்கியதை உணர துவங்கினாள். இதுவரை தரையை பார்த்து பேசியவன் பார்வை எல்லாம் ஆடைவிலகி நிற்கும் இடுப்பு மேல் விழுவதை நோக்கினாள் . கணவன் பார்வைவிட்டகன்ற பின் கண்டவன் பார்வையெல்லாம் தன்மேல் விழுவதை கவனிக்கலானாள் கவலையுற துவங்கினாள்...

உடனிருந்த போது அவளது குறைகள் மட்டும் தெரிந்தவனுக்கு இப்போது அவள் நிறைகள் தெரிய துவங்கியது அவள் அது வேண்டும் இது வேண்டுமென்றெல்லாம் நச்சரிப்பவள் கிடையாதே .! கொஞ்சம் கோபம் அதை பொறுத்திருக்கலாமோ .! நம்முடைய ஈகோவை விட்டுருக்கலாமோ .! அவள் இருந்தபோது இரவில் ஒரு நாளேனும் சாப்பிடாமல் தூங்க அனுமதித்திருப்பாளா.? மூன்று நாட்களாகி விட்டதே இரவு சாப்ட்டு படுத்து .! அவசரப்பட்டுவிட்டோமோ.? எனும் எண்ணம் அவனுள் எழத்துவங்கியது...

அவள் மனதிலோ.! தன்னை கேட்காமல் ஒரு ருபாய் கூட செலவு செய்யமாட்டானே.! இதுவரையில் தான் விரும்பி கேட்ட ஒன்றையாகிலும் மறுத்திருப்பானா.!

விரும்பிய இடங்களுக்கு கூட்டி செல்லாமல் இருந்திருப்பானா.! அவன் நம்மேல் உள்ள அதீத அன்பின் காரணமே சில கட்டுப்பாடுகள் காட்டியிருக்கலாம் பிரிந்து வந்ததற்குபதில் அதைபுரிந்து கொண்டிருக்கலாம்.! ஈகோவை விடுத்து இறங்கி சென்றிருக்கலாம் . அவன் அருகிலிருந்தது வரை ஒருத்தன் நம்மை ஏறிட்டு பார்த்தானா .! இப்போது யார் பார்வையிலிருந்து நாம் தப்ப முடிகிறது.?

இப்போது யாரை நம்புவது என புரியவில்லை அனுவுக்கு.! யார் உண்மையானவர்கள் என தெரியவில்லை.! குழம்ப துவங்கினாள்...

இதுவரை ஆண்களுக்குள் கயவர்கள் இருக்கிறார்கள் என்று எண்ணியவளுக்கு இப்போதோ ஆண்களே கயவர்களாக தெரிய துவங்கினார்கள்...

மகாத்மா காந்தியால் வீட்டை விட்டு வெளியே தள்ளப்படும் நிலையில் "உங்களை விட்டால் எனக்கு வேறு போக்கிடமேது " என்று கூறிய கஸ்தூரி பாய் எனும் அப்புனித தாயை படித்திருக்கிறோமே... படித்த அத்தாயை வாழ்க்கையில் பின்பற்றினோமா .? பின்பற்றியிருந்தால் இப்படி தனிமையில் புலம்ப வேண்டி வந்திருக்குமா.? என்று தன்னை தான் நொந்து கொண்டாள் அனு...

தன்மனைவியை வீட்டைவிட்டு வெளியேற்ற முயன்றதை வெட்கக்கேடாக குறிப்பிட்டிருந்தாரே நமது தேசப்பிதா... "என் வாழ்வே நான் உங்களுக்கு சொல்லும் செய்தி" என்றுரைத்த அம்மகானை பிடிக்கும் என்கிறோமே ... அவர் வாழ்வில் வெட்கமாக கருதியதை நாம் பெருமையாக கருதிவிட்டோமே.! மீண்டும் மனைவி என்பவள் "நல்ல ஒரு தோழி " என்றும் குறிப்பிட்டிருந்தாரே ... அதை பின்பற்றினோமா.? மனைவியை தோழிபோல்

*பாவித்தோமா.? தோழிக்குரிய சுதந்திரத்தை அவளுக்களித்தோமா.? நம்முடைய தவறுகளே நம்மை இப்படி தனிமையில் புலம்ப வைத்தது என்றெண்ணி தன்னைத்தான் நொந்து கொண்டான் விக்னேஷ்...*

*துணி துவைக்க கட்டிவைத்திருக்கும் திட்டை பார்த்தான். அதன் அருகிலிருக்கும் வாஷிங் மெசினை பார்த்தான். துணி துவைத்துக் கொண்டிருக்கையில் அவளுடன் பேசிக்கொண்டிருப்பது பிடிக்கும் அவளுக்கு. அதன் அருகே சென்றான் அதனை தொட்டுப்பார்த்தான் அவன் பேசிக்கொண்டே அவள் தலை கோதிவிடுவது போல் தோன்றிற்று அவனுக்கு...*

*தன் ஆடைகளிருக்கும் பெட்டியொன்றை திறந்து பார்த்தாளவள். அதில் அவன் புதிய சட்டையொன்று இருந்தது. அதையணிந்து இருவருமாக வெளியே செல்லும் போது பக்கத்துவீட்டு அக்கா "டேய் சர்ட் உனக்கு சூப்பர் " என்றதாலே இனி இதை நீங்கள் போடக்கூடாது எனக்கூறி தன் பெட்டிக்குள் பூட்டி வைத்துக்கொண்டாள். அதற்கு மறுப்பேதும் சோல்லவேயில்லையவன். அதை எடுத்து அணிந்து கொண்டாள். அவன் அணைப்பிற்குள் இருப்பதை போன்று உணர்ந்தாள்...*

*அருகிலிருக்கும் போது நிறைகள் மறைந்து குறைகள் மட்டுமே தெரிவதும் . இடைவெளி வந்தபின் ஒவ்வொருவரின் குறைகள் மறைந்து நிறைகள் மட்டும் தெரிய துவங்குவதும் மனித இயல்புகளில் ஒன்றல்லவா அதை இப்போது அவர்களும் உணரலாயினர்...*

*இனியுள்ள அவ(ளு)ருடைய வாழ்க்கை அவரு(ளு)க்கேற்ற துணையுடன் மகிழ்ச்சியாய் அமையும் நமது வாழ்க்கை துணையாய் "தனிமை" போதும் என்று இருவரும் எண்ணிக்கொண்டனர்...*

வழக்கமான பொலிவுடனே அன்றைக்கும் பகலவன் வந்துதித்தான். ஆனால் அன்றைய பொழுது புத்துணர்ச்சியை அளிக்கவில்லை அவனுக்கு . அலுவலகத்தில் அவன் காதுகளில் விழுந்த அக்கொடுஞ்சொற்களால் தரைமேல் விழுந்த மீனென துடித்தானவன். "அவனுக்கு எதோ பிரச்சனையாம் அதான் அவ அவன விட்டு போய்ட்டாளாம் " என தன்னுடைய ஆத்ம நண்பர்கள் என்று தான் நினைத்துக் கொண்டிருந்தவர்கள் பேசிகொண்டிருந்தார்கள் , இவன் கேட்டுக்கொண்டிருப்பதை அறியாது . இவனை பார்த்ததும் ஏதும் அறியாதது போல் "வாடா மச்சான் தம் அடிக்க போகலாம் " என அழைக்க தரையை பார்த்தவாறே தலையசைத்து மறுப்பு தெரிவித்தவன் மனதில் "இவனுங்க எல்லாம் சொல்லித்தானே விவாகரத்து வாங்கினோம் " என தனது அறிவீனத்தை எண்ணி நொந்து கொண்டான்...

"இவ கேரக்டர் சரியில்லையாம் டீ அதான் இவ புருசன் இவள விட்டுட்டு போய்ட்டானாம் " என கூறிவிட்டு கல கல வென சிரித்த தோழிகளின் வார்த்தை காதுகளில் விழுந்த அந்நேரம் அம்பு தைத்த புறா போல துடி துடித்தாள். அவசியமற்றவர்களிடம் ஆலோசனை பெற்று விவாகரத்து வாங்கி வந்தது எத்தனை பெரிய பிசகென தன் புத்தியை கடிந்து கொண்டாள்...

அன்றைய இரவு வீட்டிற்கு செல்ல மனமற்றவனாய் நேரம் சற்று பிந்தியே சாலையில் நடந்து சென்று கொண்டிருந்தான். சாலையின் பரபரப்பு அடங்கியிருந்தது. வாகனங்கள் அவ்வப்போது ஒவ்வொன்றாய் அவனை கடந்து சென்று கொண்டிருந்தது. இருள் எங்கும் கவிந்திருந்தது . அவனை போல் சாலையோர மரங்களுக்கும் மனது சரியில்லைபோலும் அவைகளும் அசைவற்று சிலையென சமைந்து நின்று கொண்டிருந்தன . தான்

இவ்வுலகில் தான் இருக்கிறோம் என்பதை அவ்வப்போது அவனை கடந்து செல்லும் வாகனங்களின் ஒலிப்பெருக்கி சப்தம் நினைப்பூட்டியது அவனுக்கு...

கொஞ்ச தூரத்தில் சாலையின் வளைவொன்றில் சிறிது பரபரப்பும் ஆள் கூட்டமும் தென்பட்டது . அருகே சென்று விசாரித்ததில் தனியாக வந்த பெண்ணொருத்தியை பலவந்தம் பண்ண யாரோ ஒருவர் எத்தனித்ததாகவும் , ஆட்களை கண்டதும் ஓடிவிட்டான் எனவும் அறிந்து கொண்டான் . கூட்டத்திற்குள் எட்டிப்பார்த்தான் முகத்தை தன்கரங்களால் மறைத்தபடி அழுதுகொண்டிருந்தாளவள். அவள் கூந்தல் கலைந்திருந்தது. முதுகுபகுதி ஆடை சற்று கிழிய அதன் வழியே அவள் உள்ளாடை தெரிந்து கொண்டிருந்தது...

அவள் கண்கள் அவனை கண்டதும் அவளது அழுகை இருமடங்கானது. அவன் தோள்மீது சாய்ந்து அழ வேண்டும் போலிருந்தது அவளுக்கு . நினைத்தவள் தாமதிக்கவே இல்லை . இதோ, அவனை கட்டியணைத்து அழுது கொண்டிருக்கிறாள் . ஏதோவொரு இருகால் மிருகத்தின் கரத்தில் சிக்கியவள் அவள் தான்... அவளே தான்... விக்னேசின் அனுவே தான்...

இப்போது அவன் கரங்களும் அவளை அரவணைத்து கொண்டது. அந்நேரம் அவளுக்கு அந்த அரவணைப்பு தேவைப்பட்டது. சாய்ந்து கொண்டாள் அவன் மார்பிலேயே. அந்த அரவணைப்பின் கத கதப்பிலேயே அவள் கண்ணீர் துளிகள் அத்தனையும் காய்ந்து போயிற்று.

இனி அவர்கள் சண்டை போடமாட்டார்கள்...

இனி அவர்கள் சமதானத்தை இழக்க மாட்டார்கள்...

இனி அவர்களை ஈகோ அணுகாது ... இனி அவர்கள் பிரிவைப்பற்றி யோசிக்கமாட்டார்கள்...

இதோ, அவள் அவன் தோள் சாய்ந்த படியே இருவருமாக மெல்ல... மெல்ல... தங்கள் வீடு நோக்கி நடக்கிறார்கள். வானிலிருந்து நட்சத்திரங்களும் அவர்கள் ஜோடியாய் நடந்து செல்வதைப் பார்த்து கண்சிமிட்டி சிரித்து கொண்டிருக்கிறது...

## 3. காதல் முதல் நட்பு வரை...

வாகனம் ஒன்று மித வேகத்தில் சென்று கொண்டிருக்கிறது. மழை வெளியே தூறல் போட்டுக்கொண்டிருக்க, வாகனத்திற்குள் இளையராஜா இன்னிசை மழை பொழிந்து கொண்டிருக்கிறார். பெருமழை இரைச்சலென வாகனத்திற்குள் இருப்பவர்கள் போடும் சத்தம் வெளியேயும் கேட்கிறது...

அவர்களுடன் வாயாடியபடியே வாகனத்தைச் சீராக செலுத்திக் கொண்டிருக்கிறார் செல்வம் . வயது ஐம்பதை நெருங்குகிறது அவருக்கு பார்வை குறைபாடில்லா ஒருவரால் அவர் வயது முப்பத்தைந்துக்கு மேல் என்று சொல்லி விட முடியாது. தினம் பதினைந்து நிமிட உடற்பயிற்சி வீண் இல்லை என்பதை நோய் நொடி அண்டா வலுவான அவர் உடல் நமக்குப் பாடமெடுக்கிறது . அவ்வாகனத்தினுள் தன் தம்பியின் மனைவி , தன் மனைவி பிள்ளைகளுடன் சென்று கொண்டிருக்கிறார் செல்வம்...

செல்வம் ஜாலி டைப் எல்லோரிடமும் சகஜமாக பேசிப் பழக கூடியவர் தன்னுடைய அப்பா முதல் தன் மகன் வரைக்கும் அத்தனை குடும்ப உறவினர்களுக்கும் முதலில் அவருக்கு நண்பர்கள் பின் தான் உறவு முறை அதனால் தான் அவர் இருக்கும் இடம் எப்போதும் கலகலப்பாக இருக்கும் இப்போதும் கலகலவென இருக்கவும் அதுவே தான் காரணம்...

அவர்கள் இப்போது சென்று கொண்டிருப்பது பக்கத்து ஊரின் தேவாலய திருவிழா ஒன்றிற்கு .

இதோ, அவர்கள் அத்தேவாலயத்தை அடைந்தாயிற்று. பிரார்த்தனையிலும் கலந்து கொண்டாயிற்று வீட்டிற்குத் திரும்ப வேண்டிய நேரமிது வீட்டிற்குக் கிளம்ப எத்தனித்த செல்வம் அங்கே! அப்பொழுது! அப்படி! ஒரு சந்திப்பு நிகழும் என்பதைக் கனவில் கூட நினைத்திருக்க மாட்டார்...

செல்வத்திற்கெதிரே ஒரு

நாற்பத்தைந்து வயது

மதிக்கத்தக்கப் பெண்

ஒருத்தி நிற்கிறாள்,

சந்திர வதனம்,

அளவான உடல்,

அம்பு போன்ற பார்வை,

தெளிந்த புத்தி,

கனிவு ததும்பும் முகம்,

காண்பவர்கள் கையெடுத்து

கும்பிடும் அளவு கண்ணியமுமாக

கனம் பொருந்திய பெண்மணி ஷேளி நின்று கொண்டிருக்கிறாள். எதிர்பாராத அச்சந்திப்பில் செல்வமும் ஷேளியும்...

இடித்த புளி என,

பேய் அறைந்தது போல,

கற்சிலை மாதிரி,

சமைந்து நின்றனர். அவர்கள்

இப்படிப்பட்ட அனுபவங்களைக் கதைகளிலும் காப்பியங்களிலும் படித்து

அறிந்திருக்கிறார்களேயன்றி அனுபவத்தில் இப்போதே முதன்முறை அனுபவிக்கிறார்கள்...

காணக்கிடைக்கா அதிசயத்தைக் கண்டது போல,

பெரும் புதையல் ஒன்று கண்ணில் பட்டது போல,

வைர வியாபாரியின் கண்ணில் பட்ட விலை மதிக்க முடியா வைரத்தைப் போல,

இன்ப அதிர்ச்சியில் அவர்கள் விழி அம்புகள் அசைவின்றி மோதி நிற்கின்றன . அவனுள் ஒரு சந்தேகம் இது நமது ஷேளி தானா ? அவளுக்குள்ளும் அதே சந்தேகம் தான் . அடுத்த நொடி அவர்கள் சந்தேகம் பறந்தது ; உண்மை புரிந்தது ; பேச விரும்புகிறார்கள் ஆனால் வார்த்தைகள் கழுத்துக்கு வெளியே வர மறுக்கிறது , நா தழு தழுக்கிறது . அடுக்கடுக்காக ஆயிரமாயிரம் வார்த்தைகளைப் பேசுபவனுக்கு இப்போது பேச வார்த்தைகள் கிடைக்காது தடுமாறுகிறான் . அவளும் அவனையொத்த மனநிலையில் இருப்பதை ஆச்சர்யத்தில் விகசித்த அவள் முகம் சொல்கிறது.

அங்கு நடக்கும் மௌன போராட்டத்தை , விழிகளுக்கும் விழிகளுக்கும் நடந்து கொண்டிருக்கும் யுத்தத்தை முடிவுக்கு கொண்டுவந்தாள் ஷேளியின் நகல் போலிருக்கும் அப்பருவ வயதையொத்த பெண். அவள் வந்து ஷேளியை அழைத்துச் சென்றாள் . விரும்பிய பொம்மையொன்றை தவறவிட்ட சிறுகுழந்தையொன்று அதையே திரும்பி , திரும்பிப் பார்த்துக்கொண்டே செல்வதைப் போல ஷேளி அவனை விட்டு மறையும் வரை திரும்ப , திரும்ப, திரும்பி, திரும்பி செல்வத்தை பார்த்துக்கொண்டே சென்றாள்...

சிறிது நேரத்திற்குப் பிறகு சுதாரித்துக்கொண்ட செல்வம் ஆலயம் முழுதும் அவளைத் தேடியும்

*கண்டுபிடிக்க முடியாமல் 99 ரன்னில் அவுட்டாகிச்செல்லும் கிரிக்கெட் வீரனைப் போல பெருத்த ஏமாற்றத்தோடே திரும்பி சென்றான்.*

*அவர்கள் ஆலயத்தை விட்டு புறப்பட்டனர். அவர்கள் சென்ற வாகனம் நடந்து பள்ளி செல்லும் மாணவனுடைய வேகத்தில் வீட்டை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. திருவிழா கண்டு திரும்பும் குடும்பம் களைத்து அமைதியாக இருக்கைகளில் சாய்ந்து தூங்குகிறது. இளையராஜா இன்னிசையால் தாலாட்டுகிறார். அவன் மனம் மட்டும் கயிறு அறுந்த பட்டம்போல நிலையின்றி அலை பாய்ந்து கொண்டிருந்தது...*

*செல்வத்தின் எண்ணம் எல்லாம் வேகமாக 2017 லிருந்து 1991 ஐ நோக்கிப் பின்னோக்கி பறந்தது.*

*இருபத்தி ஆறு வருடங்களுக்கு முன்னே இருபத்தி நான்கு வயது செல்வம் இளமை ததும்பிய மிடுக்கும், நல்ல திடகாத்திர உடம்பும், காண்பவர்களை கவந்திழுக்கும் கம்பீர அழகுமாய் குஜராத்திலிருந்து இரயில் வண்டியில் ஊர் திரும்பிக் கொண்டிருக்கிறான். அவன் முகமெல்லாம் மகிழ்ச்சி மண்டி கிடக்கிறது . தான் வைத்திருக்கும் சிறு பையொன்றில் இதயத்தில் குத்தி நிற்கும் காதல் அம்போடு கூடிய ஒரு வாழ்த்து அட்டையும் அதனுடன் ஒரு சிறு பரிசு பெட்டியும் இருக்கிறது . இப்பரிசுப் பொருள் ஒப்படைக்க வேண்டிய தனது காதலியைத் தேடி செல்வதாலே தான் இத்தனை மகிழ்ச்சி செல்வத்திற்கு . அவன் கண்டு மகிழப் போகும் காதலி வேறுயாருமல்ல சில மணித்துளிகளுக்கு முன்பு அவனுக்கு இன்ப அதிர்ச்சி அளித்து மாயமாய் மறைந்த ஷேளி தான் அது...*

*ரயில் வண்டியை விட்டு இறங்கியவன் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாட அவளைச் சந்திக்க*

வேண்டுமெனும் பேராவலில் வேக வேகமாக அவளைச் சந்திக்க செல்கிறான் . அதுவொரு விடுமுறை காலம் பன்னிரண்டாம் வகுப்பு பாடம் ஒன்றில் தோற்றுப்போனதால் டுயூட்டோரியல் வந்து சென்றுகொண்டிருந்தாள் ஷேளி டுயூட்டோரியல் இரண்டாம் மாடியில் இருக்கிறது வகுப்பு முடிந்து வெளியே வருகிறாள் ஷேளி...

*நன்கு பழுத்த மாம்பழநிறம்*

*வட்டவடிவ முகம்*

*அரைவட்ட சந்திர புருவம்*

*பார்ப்பவர்களை கவர்ந்திழுக்கும் காந்த கண்கள்*

*வெண்ணெய் போன்ற வள வளப்பான கன்னங்கள்*

*இயற்கையிலே கருமையான*

*அவள் புருவங்கள்*

*அவள் தீட்டியிருக்கும் கண்*

*மையினால் இன்னும் எழிலுற்று காட்சியளிக்கிறது.*

*அவள் நெற்றியை அலங்கரித்திருக்கிறது கறுப்பு*

*ஸ்டிக்கர் பொட்டொன்று.*

*சிகப்பு பச்சை தாவணியில்*

*ஒருபக்க தலையில் காதோரமாய்*

*சிகப்பு ரோஜா பூச்சூடி கொண்டு கொலுசுகள் 'ஜல்' 'ஜல்' என*

*சங்கீதம் பாட மாடியிலிருந்து மெல்ல*

*மெல்ல இறங்கி வருகிறாள்.*

*அவள் இறங்கிவரும் அக்காட்சி செல்வத்தின் மனதில் சில்லென்ற ஐஸ் மழையை பொழிவித்துக்*

கொண்டிருக்கிறது. அவள் கொலுசிலிருந்து வரும் 'ஜல்' 'ஜல்' சத்தம் அவன் மனதில் 'பட்' 'பட்' என வந்து மோதி அவன் இதயத்தில் பெருஞ்சத்தத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றன . இறங்கிவருகிறவள் ஓரக்கண்ணால் இவனைப் பார்த்து தன் செம்பவள வாய் திறந்து, தன் ஆரஞ்சுபழ இதழ்விரித்து லேசாக இளநகை ஒன்று ஒட்டினாள் . அந்நொடி அவன் மனதிற்குள் ஆயிரமாயிரம் விண்மீன்கள் ஒத்தொருமித்து

பிரகாசித்து மறைந்தன...

அவள் அருகில் நெருங்கி வர வர அவன் இதயம் மகிழ்ச்சியில் பட பட வென அடித்துக்கொண்டது . அவள் இதயமோ படபடவென பயத்தில் அடித்துக்கொண்டது. கடிதத்தில் எழுதியிருந்த பார்க்க வேண்டும், பேச வேண்டும் போன்ற சமாச்சாரங்கள் எல்லாம் பயம் பறக்கடிக்க துவங்கியது . அருகில் நெருங்கி வர வர கண்ஜாடை செய்து அழைத்தான் , கண்களாலே மாட்டேன் என்றாள். இவனோ அருகில் சென்றான் அவளோ பயத்தில் செல்வம் போ... போ... யாராச்சும் பாத்துடுவாங்க ... பெரிய பிரச்சனை ஆகிடும்... போ... போ... எனத் துரத்த துவங்கினாள். அந்நொடி அவன் இதயத்தில் பிரகாசித்து கொண்டிருந்த விண்மீன்கள் அவனைப் பார்த்து பரிகசித்து சிரிப்பது போலிருந்தது அவனுக்கு . அவள் அவனைத் துரத்தி விடுவது அவன் மீது எந்திர கல்லை கட்டி அவனைத் தூக்கி கடலில் போடுவது போலிருந்தது...

அவன் ஆசைகள் எல்லாம் நிராசை ஆன வெறுப்போடே அவளை வெறித்துப் பார்த்துக்கொண்டே நின்றான். அவளோ தவறு செய்து விட்டு அம்மாவைப் பயமும் பாவமுமாகத் திரும்ப , திரும்பப் பார்த்துக்கொண்டிருக்கும் குழந்தை போல

பயமும், பரிதாபமுமாக அவனைத் திரும்ப, திரும்ப, திரும்பி, திரும்பி அவள் மறையும் வரை பார்த்துக்கொண்டே சென்றாள். சற்று நேரத்தில் அவன் வெறுப்பு கோபமா மாறி அங்கேயே அவளுக்காகக் கொண்டுவந்த பொருளையும் வாழ்த்து அட்டையையும் விசிறி எறிந்து விட்டு அன்றைக்கே குஜராத் திரும்பிச் சென்றுவிட்டான்...

மீண்டும் கடிதம் வந்தது ஷேளியிடமிருந்து "என்னை மன்னிச்சுச்சுடுடா செல்வம் நான் பண்ணது தப்பு தான் உன் நிலை புரிகிறது எனக்கு . நான் வேணும்னே அப்படி பண்ணல பயத்தில் தான் அப்படி பண்ணிட்டேன். ப்ளீஸ் டா கோபத்துல கடிதம் போடாம இருந்திடாத உன் கடிதத்துக்காக காத்திருப்பேன்"

இப்படிக்கு,

ஷேளி...

"எப்போது நீ என்னை அலட்சிய படுத்தீட்டு போனியோ அப்போவே உன்னை மனதிலிருந்து தூக்கி தூர எறிஞ்சிட்டேன். இப்போ நீ அனுப்பின கடிதம் கிழிந்து துண்டு துண்டா குப்பைல கிடக்கிறது போல உன்னோட நீயபகங்களையும் குப்பையா தூக்கி வீசிட்டேன். இனி உன்னோட வழி உனக்கு , என்னோட வழி எனக்கு உனக்கு ஒரு கும்பிடு , உன் பயத்துக்கு ஒரு கும்பிடு , உன் அப்பன் சொல்றவன கட்டிகிட்டு சந்தோஷமா இரு என்னை ஆளை விடு சாமி" என்பதாய் எழுதி அனுப்பினான்...

அத்துடன் முடிந்தது அவர்கள் காதல் கதை. அதன் பின் திரும்ப அவர்கள் சந்தித்து கொண்டது 26 ஆண்டுகளுக்குப் பின் இன்றைக்குத் தான்...

அன்றைய இரவு இருவருக்கும் தூக்கம் போனது . அவளைக் குறித்து யோசிக்கத் துவங்கினான் அவள்

அப்படியே தான் இருக்கிறாள் . அவளிடம் எந்த மாற்றமும் இல்லை, அதே பார்வை, அதே அடக்கம், அதே பயம், அவள் அப்படியே இருக்கிறாள். அவளை வந்து அழைத்துச்சென்றது சந்தேகமே இல்லை அவளின் இளவல் தான் அவளை நகலெடுத்தது போலல்லவா இருந்தாள்...

அவள் அணிந்திருந்த ஆடையும் போட்டிருக்கும் நகை நட்டுகளும் அவள் வாழ்வில் வசதிக்கொன்றும் குறைவின்றி எங்கோ மகிழ்ச்சியாக வாழ்கிறாள் எனும் எண்ணத்தைக் கொடுத்தது அவ்வெண்ணம் அவன் மனதிற்கு மகிழ்வையும் ஆறுதலையும் தந்தது...

இந்தச் சினிமாவிலும் காதல் கதைகளிலும் மட்டும் தான் பிரிந்து சென்ற காதலிகள் எங்கோ கஷ்டப்படுவார்கள் போலும் நிஜத்தில் அவரவர்களுக்குத் தகுந்தபடி எங்கோ கிடைத்த வாழ்க்கையைச் அனுபவித்து சந்தோஷமாக தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என எண்ணி மனதிற்குள் நகைத்துக் கொண்டான்...

அவளது சிந்தனையையும் அவனே ஆக்கிரமித்துக் கொள்ள, முகநூலில் அவனைத் தேடினால் என்ன எனும் எண்ணம் வந்தது அவளுக்கு , நொடியும் தாமதிக்கவில்லை அவள். நீண்ட தேடலுக்கு பிறகு கிடைத்தது அவனது ஐடி , பகிர்ந்திருந்த புகைப்படங்களும், பதிந்திருந்த தகவல்களும் அது செல்வம் தான் என்பதை உறுதி செய்தது அவளுக்கு . அதிலிருந்து அவனுடைய நம்பர் எடுத்துக்கொண்டாள் விடிந்ததும் முதல் வேலையாக அவனுக்கு அழைத்தாள். பெரிய அறிமுகம் எதுவும் தேவைப்படவில்லை அவளுக்கு அவளைப் புரிய வைக்கப் பேசிய ஓரிரு வார்த்தைகளிலே கண்டுபிடித்துக் கொண்டான் செல்வம்...

*ஆளைப் புரிந்து கொண்டதும் சில நொடிகள் காரணமின்றியே சிரித்துக் கொள்கிறார்கள் அவர்கள் . அவர்கள் காதலை பிரித்த காலம் மீண்டும் அவர்களை நண்பர்களாக இணைத்ததை எண்ணியாக கூட இருக்கலாம் அச்சிரிப்பு...*

*அதன் பின் சில நொடிகள் மௌனம் அவர்களைப் பிடித்துக்கொண்டது. அது ஒருவேளை இறந்து போன அவர்கள் காதலுக்கு அவர்கள் செலுத்திய மௌன அஞ்சலியாகக் கூட இருக்கலாம்...*

*26 ஆண்டுகளுக்குப் பிறகு பேசிக்கொள்கிறார்கள் அவர்கள். அவர்களுக்குப் பேச நிறைய இருக்கும் அவர்கள் பேசட்டும், அவர்களை நாம் தனிமையில் விட்டுவிடுவோம். அவர்கள் நிறையப் பேசட்டும் , நிறைவாய் பேசட்டும், பழைய நாட்களை எண்ணி எண்ணி இனி சிரிக்கட்டும்...*

*இனி அவர்கள் வாழ்வில் காதலுக்கு இடமில்லை . நல்ல நண்பர்களாக இருப்பார்கள். குடும்பத்தோடு சந்தித்து கொள்ளுவார்கள். தங்களது சுக துக்கங்களைப் பகிர்ந்து கொள்ளுவார்கள் . காதலாகத் துவங்கிய அவர்கள் வாழ்க்கை நல்ல நட்பாக மீண்டும் இணைந்திருக்கிறது. அவர்கள் நட்பு இனி இறுதி வரை இப்படியே பயணப்படும்...*

## 4.அழகேசன் மாமா...

*கந்தலான கட்டம் போட்ட சட்டை .. கசங்கிய நிலையில் லுங்கி.. வானில் நட்சத்திரங்களை போல் ஓட்டைகள் நிரம்பிய டவல் ஒன்று தோளில் .. பின்னங்கால் தரையை தொட்டுவிட முன் பாதமும் தரையை தொட்டு விட வெகு தூரம் இல்லை அப்படியொரு செருப்பு.. குழி விழுந்த கண்கள்.. கூன் விழுந்த முதுகு.. வயது 65 க்குள் தானிருக்கும் 90 ஐ தொட்டு விட்டவர் போல் தூரத்தில் காட்சியளிக்கிறார் அழகேசன் மாமா....*

*இவர் தான் எங்கள் ஊரிரிலிருந்து முதன்முதலில் விமானமேறி வேலைக்கு வெளிநாடு சென்றவர் .. கிட்டதட்ட 30 வருடங்களுக்கு மேல் அங்கேயே காலம் கழித்தவர்.. விடுமுறைகளின் போது எங்கள் வீட்டு தெருவழியாக அவர் சென்றாலே நான் சொல்லிவிடுவேன் அம்மா அழகேசன் மாமா போறாரு.! அவ்வளவு வாசம் வீசும் அவர் அடித்திருக்கும் செண்டு....*

*முதன் முதலில் கோடாலி தைலம் அவர் கொடுத்து தான் நான் பார்த்திருக்கிறேன் .. பள்ளியில் என்னை "ஹீரோ"வாக மாற்றியிருந்த "ஹிரோ" பேனா அவர் கொடுத்தது தான்.. இன்னும் அப்படியே நினைவில் இருக்கிறது அவர் பேனா வாங்கி வைத்திருப்பதாக சொன்ன அன்றிலேருந்து ஊரில் 'பேய் மழை' ஊரே வெள்ளக்காடு இன்னும் ஓரிருநாள் காத்திருக்க பொறுமையின்றி அம்மழையிலும் முட்டளவு வெள்ளத்தில் போய் வாங்கி வந்தேன் .. கூடவே காய்ச்சலையும்.. அதற்காக அப்பா கொடுத்த அடியின் வலி இன்னும் அப்படியே மனதில் நிற்கிறது....*

அக்ஹிரோ பேனா தான் பெண்கள் அத்தனை பேரையும் என்னை சுற்றி வர வைத்தது .. ஒரு நாள் எழுத கொடுத்தால் போதும் எனக்கும் சேர்த்தே வீட்டு பாடம் எழுதி கொண்டு வருவாள் மல்லிகா .. நண்பர்கள் அத்தனை பேரும் பொறாமை பட .. ஆசிரியர்களுக்கிணையாய் என் பாக்கெட்டிலும் "ஹிரோ" பேனா தொங்க காரமாயிருந்தவர் அவர் தான்....

அழகேசன் மாமாவிற்கு ஆசைக்கு ஒண்ணும் ஆஸ்திக்கு ஒண்ணுமாய் ரெண்டு பிள்ளைகள் .. குடும்பம் குழந்தைகள் என்றால் உயிர் மாமாவிற்கு அவர்களுக்கும் அப்படி தான்.. அவர் மகன் பவித்ரன் சொல்வான் "வயசாகிற போது உங்களை ராஜா போல வெச்சு பாத்துப்பேன் " என்பான் மகிழ்ச்சி பெருமிதத்தில் சிவக்கும் அவர் முகம் .. பிள்ளைகளை நன்கு படிக்க வைத்தார் நல்ல இடத்தில் திருமணமும் செய்து வைத்தார் .. குடும்பத்திற்காக ஓடி ஓடி உழைத்தாரேயன்றி தனக்காக எதையும் சேர்த்து வைக்கவில்லை..

தன்னுடைய சொத்து பத்துக்களை பிள்ளைகளுக்கே பிரித்து எழுதிக் கொடுத்தார்.. தன் மீது உயிராய் இருந்த மகனை உயிராய் நினைக்க ஒருத்தி வந்தாள் .. அவள் மூலம் இவன் உயிராய் நினைக்கும் பூக்கள் ரெண்டு பூத்தது பேரழகாய் .. காலங்கள் எப்படி எல்லாம் மாற்றுகிறது மனிதர்களை.. புதிய குடும்பம் மற்றும் பிள்ளைகளின் வருகையில் தந்தையை மறக்க தொடங்கினான் அவன்....

அம்மாவை மட்டும் இருவரும் போட்டி போட்டுக்கொண்டு அழைத்து சென்றனர் .. குடும்ப தேவைகளுக்காய் பொருளீட்டும் வேட்கையில் பல தொழில் கற்றறிந்த மாமாவிற்கு ... வயோதிப காலத்தில் பிள்ளைகளுடன் ஒட்டி இருக்க வீட்டை

பார்த்து கொள்ளவும் .!! சமையல் செய்யவும் .!! "குறிப்பாக குழந்தைகளை கவனித்து கொள்ளவும் " தெரிந்திருக்க வேண்டும்.. என்பது தெரியாமல் போனது வேதனையே.!!

பசுமையாய் இருந்தவரை அதன் நிழலில் தங்கி அதன் கனிகளை புசித்து கொழுத்திருந்த பறவைகள் இலைகள் உதிர்ந்து கிளைகள் ஒடிந்த பின் இனி பலனில்லை என்பதை புரிந்து கொண்டு பறந்து செல்வதை போல் .. சொந்தங்கள் விட்டுச்செல்ல இப்போது அனாதையாகி போனார் அழகேசன் மாமா....

நீண்ட இடைவெளிக்கு பின் இன்று தான் அழகேசன் மாமாவை பார்க்கிறேன் .. நலம் விசாரித்து கொண்டோம் எப்போதும் அவர் புன்னகையில் மகிழ்ச்சி மணக்கும் .. இன்றைக்கும் புன்னகைத்தார் கண்களில் 'சோகம் படர'

மாமா சுய கௌரவ அதிகம் பார்ப்பவர் ஐநூறு ருபாய் தாள் ஒன்றை எடுத்து அவர் பாக்கெட்டில் திணித்தாவது கொடுக்க நினைத்தேன் ... அதற்கு அவசியமின்றி அவரே அதை இழுத்தெடுத்து கொண்டார்.. விடைபெறும் தருவாயில் எனை பார்த்து கையெடுத்து கும்பிட்டு சென்றார் .. அவர் சிரித்தார் என் கண்கள் பனித்தது....

அழகேசன் மாமா என்னிடம் எதையும் சொல்லவில்லை ஆனால் அவர் வாழ்க்கை எனக்கேதோ சொல்கிறது புரிந்தும் புரியாமலும் "காலத்தின் கரங்களில் நானும்... "

## 5. நெதி

நான் அப்போ ஏழு இல்லேண்ணா எட்டாவது படிச்சிட்டு இருந்திருப்பேன். நான் தினமும் பள்ளி சென்று வரும் வழியில் ஒரு குளம் உண்டு . அக்குளத்தின் நடுவே ஒரு சிறிய பாறை ஒன்றும் உண்டு. அதன் மேல் அடிக்கடி கம்பம் பூ (கமுகு மர பூ) சிதறிய தேங்காய், மற்றும் பூஜை சாமான்களும், பூஜை முடிந்து கலைந்த நிலையில் கிடக்க காண்பேன் அதை பார்க்கும் போதெல்லாம் பல கேள்விகள் என் மனதில் எட்டி பார்க்கும். ஏதோ ஒரு காரணமின்றி குளத்தின் நடுவே உள்ள அப்பாறைக்கு பூஜை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. அதை இன்றைக்கு என்னுடைய பாட்டியிடம் கேட்டுவிட தீர்மானித்தேன்...

நான் தினமும் காணும் அக்காட்சிகளையும் அதன் காரணத்தையும் வீடு வந்ததும் முதல் வேலையாக பாட்டியிடம் கேட்டேன். அக்கதையை கேட்டதுமே நீண்ட நெடிய பெருமூச்சொன்று விட்டபடி சொல்ல துவங்கினாள் பாட்டி.

“இப்படிப்பட்ட கதைகள இந்த காலத்துல உள்ளவங்க கிட்ட சொன்னா யாரு நம்புறா? உன் அப்பன் ஒருத்தன் போதும் இதெல்லாம் கட்டுக்கதைன்னு சொல்ல.”

“அவங்கள விடு பாட்டி... நீ சொல்லு நான் நம்புறேன்” என்றேன் பாட்டிக்கு கதை சொல்ல தெம்பூட்டும் விதமாய்.

பாட்டி கதை சொல்ல துவங்கினாள். கதை கேட்கும் ஆவல் மழைக்கும் வந்தது போல துவங்கியிருந்தது வெளியே மழை.

“நான் உன் வயசுல இருக்குறப்போ என் பாட்டி

எனக்கு சொன்னது. வழக்கம் போல ஒரு நாள் அந்த குளத்துல இளசுங்க எல்லாம் குளிக்க போனாங்களாம் அப்போ பார்த்து பயங்கர மழையாம். மழை தண்ணி நாலா பக்கத்திலேருந்தும் அடிச்சிட்டு வந்து குளம் கரைபுரண்டு ஓடுதாம் . அப்போ தான் யாரும் எதிர்பாத்திராத நேரத்துல அந்த அதிசயம் நடந்திச்சாம்! அந்த மழையில நெதி ஒண்ணு வார்ப்பு வடிவில மெதந்து வெள்ளத்துல அடிச்சிட்டு வந்து பொளேர்ன்னு குளத்துல விழுந்திச்சாம்''

என பாட்டி கதை சொல்லி வந்த அந்நேரம் பார்த்து பாழாப்போன இடி ஒண்ணு வீட்டு கூரை மேலே விழுந்தது போல பக்கத்துல எங்கோ படார்ன்னு விழ நான் பயத்துல பாட்டிய அப்டியே கட்டி பிடிச்சிட்டேன் பதட்டத்துல என் மண்ட பாட்டியோட தாடையை பதம் பார்க்க வலியில் "ஐயோ'' என்றாள் பாட்டி. உடனே நானும் "வலிச்சதா ?'' பாட்டி என பரிதாபமாய் கேட்டவாறே அடிபட்ட இடத்தில் முத்தம் ஒன்று பதித்தேன் . மகிழ்ச்சியில் தனது பொக்கை வாய்திறந்து சிரித்த பாட்டி தன் மார்போடு எனை கட்டியணைத்து உச்சி முகர்ந்து கன்னத்தில் முத்தமிட்டு கதையை தொடர்ந்தாள்...

இடைமறித்த நான் "நெதின்னா என்ன?'' பாட்டீன்னு கேட்க "நெதிக்குண்ணு தனியா வடிவம் இல்ல அது வார்ப்பு போல இருக்கும், குத்து வெளக்கு போல இருக்கும், இன்னும் சின்ன அம்மியும் குளவியுமா கூட இருக்கும், தெங்குல எல்லாம் ஏற போவானே நம்ம கதிரேசன் அவன் மகன் கூட இப்போ அமெரிக்காவுல இருக்கானே அவனுக்கு கெடச்சது பாக்கு போல உள்ளதாம் . நெதி கெடச்சு நல்லானவங்க நெறைய பேரு நம்மூருல உண்டுன்னு எங்க அப்பா சொல்வாரு டா. நெதி கெடச்சவன் நினைக்கிற காரியம் எல்லாம் நடக்கும். எந்த தொழில் செய்தாலும் லாபம் கொழிக்கும். பணம் கொண்டோ

*கொட்டுண்ணு கொட்டும் . 'அலாவுதீனும் அற்புத விளக்கும்' படத்தில் வரும் விளக்கு போல தான் பூதம் இல்லா விளக்கது'' என்று நெதிக்கு பெரியதொரு விளக்கம் எனக்களித்துவிட்டு விட்ட இடத்திலிருந்து கதையை மீண்டும் தொடர்ந்தாள்...*

*''குளத்தில் விழுந்த நெதியை பார்த்ததும் எல்லாரும் ஒரு நிமிடம் அதிர்ச்சியில் உறைந்து போனார்களாம் . சுதாரித்து கொண்ட ஒருவன் கத்தினானாம் 'டேய் ! நெதி மெதந்திருக்குடோய் நெதி !' அதை கேட்டதும் சுதாரித்து கொண்ட அத்தனை இளவட்டங்களும் சிங்க கெபிக்குள் விழுந்த ஆட்டை பிடிக்க பாயும் சிங்கங்களை போல நெதியை பிடிக்க முண்டியடித்து கொண்டு நீந்த தொடங்கினார்கள்...*

*அங்கே நடக்க போகும் சோகத்தை அறிந்து கொள்ளும் கால கண்ணாடி ஒன்று மட்டும் அவர்கள் கையில் இருந்திருந்தால் வேட்டைக்காரனை பார்த்த முயல் போல இந்நேரம் மூன்று கீலோ மீட்டர் தாண்டி ஓடி இருப்பார்கள் அத்தனை பேரும் என்ன செய்ய விதி அதுவல்லவே!*

*நெதியை பிடிக்கும் முயற்சியில் திறமையான ரெண்டு மூன்று பேர் நெதியை பிடித்து விட்டார்கள் . கரைக்கு கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டிருந்த அவர்கள் மேல் யாரும் எதிர்பாராத விதமாக எங்கிருந்தோ உருண்டு வந்த அந்த பெரிய பாறை நெதியுடன் சேர்த்து அவர்களையும் உயிருடன் புதைத்து விட்டது அக்குளத்திற்குள்...*

*''ஏன் பாட்டி ? அப்டி ஆச்சு ? இனிமே அந்த நெதி மெதக்கவே மெதக்காதா?''*

*என கேட்ட என்னிடம்*

*''அப்போ நெதி விளையலயாம் விளையாம வெளிய தெரிஞ்சது தான் வினையா போச்சு ! இப்போ அத*

*வாதைங்க (பூதம்) காவல் காத்திட்டு இருக்கும் . வாதையோட மனச குளிர வைக்க தான் இந்த பூஜையெல்லாம். இனியும் ஒருநாள் மெதக்கும் ! அப்போ யாருக்கு விதிச்சிருக்கோ அவங்க கண்ணுல மட்டும் தான் படும் அவங்களுக்கு அது கிடைக்கும்'' என நம்பிக்கையோட கூறினாள் பாட்டி...*

*காலனுக்கும் கதை கேட்க ஆசை போல எனது பாட்டியை சீக்கிரமே அழைத்து கொண்டான் தன்னிடமாய். பாட்டி காற்றில் கலந்தாலும் பாட்டி சொன்ன கதை மட்டும் இன்னும் என் காதில் ஒலித்துக்கொண்டே இருக்கிறது...*

*(இப்படிப்பட்ட பாறை ஒன்றுடன் கூடிய குளம் எங்கள் கிராமத்தில் இப்போதும் பார்க்கலாம் . இக்கதையும் பாட்டி உட்பட பலர் சொல்லி நான் கேட்ட கதையே.)*

## 6. விதைப்பது முளைப்பது நிச்சயம்...

நான் ரமேஷ், குவைத் ஏர்போட்டில் இருக்கிறேன் மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருக்கிறேன் . இரண்டாண்டுகளுக்கு பிறகல்லவா ஊருக்கு செல்கிறேன் அதுவே என் அளவு கடந்த மகிழ்ச்சிக்கு காரணம். என் அருகில் நாற்பத்தி ஐந்து... ஐம்பது வயது மதிக்க தக்கவர் ஒருவர் வந்தமர்ந்தார். பார்க்க அழகாக கண்களில் கனிவு பொருந்தியவராக காட்சியளித்தார். அவரும் தமிழ் தான் எனவே எளிதில் அவரிடம் பழகிவிட்டேன்...

என்னுடைய கதைகளை அவரிடம் அடுக்க தொடங்கினேன் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நான் ஊரிலிருந்து வரும் போது மகனுக்கு ரெண்டு வயது . மனைவி நிறைமாத கர்பிணியாக இருந்தாள். இங்கு வந்த பிறகு தான் மகள் பிறந்தாள். அப்போ தத்தி தத்தி பேசுனவன் இப்போ எப்டி பேசுறான் தெரியுமா சார்?! பிறந்ததுக்க அப்புறம் இப்போ தான் மகள பாக்க போறேன் சார். இப்போ பேச ஆரம்பித்திருக்கிறாள் அவங்க ரெண்டு பேருமே பயங்கர சேட்டை சார் என என்னுடைய மகிழ்ச்சியும் ஏக்கங்களுமான சம்பவங்களை அடுக்கி கொண்டே போனேன் . அதெற்கெல்லாம் அவரும் ம் ...ம் கொட்டிகொண்டே இருந்தார்...

நாம் மகிழ்ச்சியாக இருக்கும் பொழுது பிறரும் மகிழ்ச்சியாகவே இருக்கிறார்கள் என சில சமயம் தவறாகவே கணித்து விடுகிறோம் . நான் அவரிடம் கேட்டேன் “சார் நீங்க என்ன விசேஷமா ஊருக்கு போறீங்க?” கண்கலங்க சொன்னார் “எமர்ஜென்சி லீவுல போறேன் தம்பி நான்கு நாட்களுக்கு முன்னாடி மகனுக்கு ஒரு விபத்து நிகழ்ந்து விட்டது

அதனால்தான் போகிறேன்'' என்றார்...

சிலநொடிகள் எனக்கு மௌனம் தேவைப்பட்டது வெட்கி தலைகுனிந்தேன் நான் . எத்தனை பெரும் வருத்தத்தில் இருப்பவரிடம் அவர் நிலை உணராமல் என்னுடைய மகிழ்ச்சியை பகிர்ந்திருக்கிறேன் என்பதை எண்ணி...

அவர் கரங்களை பற்றிக்கொண்டேன் ''வருத்தபடாதீங்க சார் எதுவும் ஆகாது உங்க மகன் நலமாக வீடு திரும்புவான்'' என்றேன்.

அவர் என் கரங்களை பிடித்துக்கொண்டு அழ ஆரம்பித்தார் கண்களை துடைத்துவிட்டு சொன்னார் ''என் மனம் பாவத்தால் பாரமா இருக்கு தம்பி ! நான் பெரிய குற்றம் செய்து விட்டேன். அதற்கு கிடைத்த தண்டனை தான் இது'' எனசொன்னவர் தன்னுடைய கதையை என்னிடம் சொல்ல ஆரம்பித்தார். யாரும் யாரிடமும் எளிதில் இதுபோன்ற கதைகளை சொல்லி விடுவதில்லை தான் என்னுடைய வெள்ளந்தி தனமான பேச்சு அவரை கவர்ந்ததா இல்லை சிலரை பிடித்துபோக காரணங்கள் எதுவும் தேவையில்லை என்பது இதுதானா புரியவில்லை எனக்கு ஆனால் தொடர்ந்தார் அவர்.

''தம்பி எனக்கு கொஞ்சம் கடன் உண்டு அதற்காக மனைவியின் நகையை அடகு வைத்திருந்தேன் அதை மீட்டு கொடுக்க கேட்டு தினமும் சண்டை வீட்டில் . அந்த நேரம் பார்த்து என் அறையில் ஒன்றாய் இருப்பவன் தன் தங்கையின் திருமணத்திற்காக கடன் வாங்கி வைத்திருந்த காசு என் கண்ணில் பட்டது . அதை எடுத்து ஊருக்கு அனுப்பி நகையையும் மீட்டு விட்டேன் கூடவே இருப்பதால் என் மீது சந்தேகமும் வரவில்லை.

காசு இல்லாததால் அந்த திருமணமும் தடைபட்டு

போனது. இது நடந்து மூன்று நான்கு மாதங்கள் இருக்கும் இப்போது மகனின் அறுவை சிகிட்சைக்காக அத்தனை நகையையும் விற்று விட்டோம். குற்ற உணர்ச்சி எனை கொல்கிறது தம்பி இனியும் பணம் தேவை படுகிறது வீட்டைகூட விற்க தயராகவே இருக்கிறோம் எங்கள் மகனுக்கா . நீயும் என் மகனுக்காக பிராத்தனை செய் இப்போது என்னுடைய பிராத்தனையும் இறைவா தண்டனையை எனக்கு கொடுத்து அவனை திருப்பி கொடு என்பதுதான்'' என்று கூறி முடித்தார்.

எங்களது இருவரது விமானங்களும் பறக்க தயார் என அறிவிப்பு வந்தது. அவருக்கு ஆறுதல் சொல்லி கனத்த இதயத்துடன் அவரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டேன். அவருக்கு நேர்எதிராக நடக்க தொடங்கினேன். என்னை திருட்டுக்கு தூரமாயும் என் கால்களுக்கு நேர்ழியும் அவர் மகனுக்கு நலத்தையும் கொடு இறைவா! என்ற எனது பிராத்தனையுடன்.

தூரத்தில் எனக்கான விமானம் தனது செட்டைகளை விரித்து பறக்க தயாராய் நின்று கொண்டிருக்கிறது.....

## 7.அவள் அப்படி தான்...

ஆசிரியர் வீட்டுப் பாடம் ஏன் எழுதி வரவில்லையென்றதற்கு உடம்பு சரியில்லை என்றாள் அமைதியாக. கோபமாக நீ பொய் சொல்கிறாய் என்றார் அவர் . அவர் முகம் பார்த்து சத்தத்தை உயர்த்தியே சந்தேகம் என்றால் வீட்லிலேயே போய் கேட்டுக்கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டு அவர் அனுமதியின்றியே அமர்ந்து கொண்டாள்.

அவள் அப்படி தான்...

தனக்கு சரி என்று தோன்றினால் யார் , என்ன, என்றெல்லாம் பார்க்க மாட்டாள் . தன்னை கோபமூட்டினால் யாரிடமும் எதிர்த்து நிற்பாள் . அவளிடம் எப்போதும் ஒரு திமிர் , யாருக்கும் அடங்காமை, தனக்கு விருப்பமானதை யார் என்ன நினைப்பார்கள் என்ற கவலையின்றி செய்து முடிப்பது என ஒரு வித்தியாசமானவளாகத் தெரிந்தாள். அதுவே அவள் மீது எனக்கு ஒரு ஈர்ப்பை வரவைத்தது. அதுவே சில நாட்களில் அவள் மீது நான் காதல் கொள்ள காரணமாகவும் போனது.

ஆமா, நான் இதுவரை எங்களை அறிமுகபடுத்தவில்லை இல்ல நான் கதிர் கதிரேசன் அது தேனு தேன்மொழி.

நாங்கள் அப்போது பத்தாவது படித்து கொண்டிருந்தோம். என்னுடன் படிக்கும் மாணவன் மணி கையில் ரோஜாபூவும் வாழ்த்து அட்டையுமுடன் என்னுடைய சாபத்தை வாங்கி கட்டிக்கொண்டே அவளிடம் தன் காதலை சொல்ல போனான். காதலை சொல்லியவன் கன்னத்தில் விழுந்தது பளார் என அறையொன்று அறைந்துவிட்டு "நான் இங்கு

காதலிக்க வரவில்லை படிக்க வந்திருக்கிறேன் போடா..." என்றாள் கோபமாக . அவள் அறைந்த அறையில் நாலு அடி தள்ளி போய் அவன் விழுந்தான். நடு கடலிலே போய் விழுந்தது அவள் மீது நான் வைத்திருந்த என்னுடைய காதல்...

அவள் அப்படி தான்...

பத்து பாஸ் ஆகி பனிரெண்டாம் வகுப்பு போனோம் . இப்போது லேசாக சிரிப்பாள் . அவ்வப்போது பேசுவாள் பாடத்தில் ஏதேனும் சந்தேகம் என்றால் என்னிடம் கேட்பாள் . ஓரளவு நண்பர்கள் ஆகியிருந்தோம். அடுத்து கல்லூரி செல்ல இன்னும் நல்ல நண்பர்கள் ஆகி விட்டோம் . அன்னைக்கு அவர்கள் தங்கியிருக்கும் ஹாஸ்டல் மொட்டை மாடியில் முகம் தெரியா யாரோ ஒருவன் இறங்கி ஓடினானாம். எங்களுக்கு பாதுகாப்பு வேண்டும் என்று மற்ற மாணவிகளை எல்லாம் ஒன்று சேர்த்து உள்ளிருப்பு போராட்டம் ஒன்றை நடத்தி வெற்றியும் கண்டாள். அன்றையிலிருந்து ஹாஸ்டல் மாணவிகளுக்கு தலைவியாகி போனாள்.

அவள் அப்படி தான்...

இவள் ஒரு வாயாடி , அடங்காபிடாரி, போகுமிடமெல்லாம் சண்டை போடும் சண்டைக்காரி என யாரோ நல்லவர்கள் சிலர் அவள் வீட்டில் போட்டுவிட படிப்பை பாதியில் நிறுத்திவிட்டு திருமணத்திற்கு ஏற்பாடு செய்தனர் பெற்றோர். உங்கள் திருமணமும் வேண்டாம் உங்கள் வீடும் வேண்டாம் எனக்கு படிப்பு மட்டும் போதும் . என்று வீட்டை விட்டு வந்து பார்ட் டைம் வேலை பார்த்துகொண்டே படிக்க துவங்கினாள் . நிறைய படித்தாள் நல்ல வேலைக்கு சென்றாள் வீட்டினர் அனுமதியின்றி கூட படித்த மனமொத்த மாணவன் ஒருவரை மணமுடித்து கொண்டாள்.

நாட்கள் நீண்டது எங்கள் தொடர்பு அற்றுப்போனது . நீண்டவொரு பிரிவிற்குப் பின் என் நண்பன் ஒருவன் திருமணத்தில் சந்தித்துக் கொண்டோம் . தன்னுடைய ஒற்றை மகனுடன் வந்திருந்தாள். கணவனைக்குறித்து கேட்டேன் தன்னுடைய அம்மாவை அனுசரித்து போக சொன்னான், தன்னுடைய அக்கா தங்கைகளை அனுசரித்துப் போக சொன்னான் , அவர்களுக்கும் எனக்கும் ஒத்து வரவில்லை . தனிக் குடித்தனம் அழைத்தேன் வர மறுத்து விட்டான் போடா எனக்கூறி தனியாக பிள்ளையைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டேன் என்றாள் சாதாரணமாக.

அவள் அப்படி தான்...

அதன் பின் தன்னுடைய மகனைத் தவம் போல் வளர்த்துக் கொண்டு வந்தாள் . அவனும் பெரியவன் ஆனான் அவனுக்கும் மணம் முடிந்தது . வந்த மருமகளைப் பிடிக்கவில்லை அவள் மாமியாரைத் தனியாக விட்டு விட்டு தன் வீட்டிற்குச் சென்றுவிட்டாள். உடன் மகனும் சென்று விட்டான் . முடியாத காலம் முதியோர் காப்பகம் தான் ஆதரவளித்தது அவளுக்கு.

இன்றைக்குப் பேசியிருந்தேன் உடைந்து போய் பேசினாள் "கழிவறையில் தண்ணீர் இல்லை என்று தான் போய் சொன்னேன் தண்ணீர் இல்லையென்றால் பேப்பரை எடுத்துக்கொண்டு போடி கெழவி ... ரெண்டு மாசம் ஆகுது உன் புள்ள காசு குடுத்து... மொத உன் புள்ளைக்கிட்ட காசு குடுக்க சொல்லு . காசு குடுக்க வழியில்ல கம்ளேன்ட குடுக்க வந்திருக்கு மூதேவி" என வாயில் வந்தது போல் திட்டி அனுப்பினான். பேச முடியவில்லை அவனிடம் தலை குனிந்தவளாய் நிலைகுலைந்து போய் வந்து உட்கார்ந்தவள் தான் எத்தனை மணி நேரம் ஆனது என்றே தெரியவில்லை உன் போண் வந்தே

சுயநினைவுக்கு வந்தேன் என்று கூறி சற்று பேச்சை நிறுத்தினாள்.

அவள் எனது வருத்தத்திற்கு ஆறுதல் கூறியிருக்கிறாளே ஒழிய அத்தகைய வாய்ப்பை அவள் ஒரு போதும் எனக்கு கொடுத்ததே இல்லை . எதையும் சமாளிக்கும் திறன் அவளுக்கு உண்டு . பிரச்சனைகளைக் கூட சிரித்துக்கொண்டே தான் சொல்லுவாள்.

அதனால் அவளுக்கு ஆறுதலாக ஓரிரு வார்த்தைகள் கூட என்னால் பேச முடியவில்லை. சற்று நிறுத்தி மீண்டும் தொடர்ந்தவள் "நான் நல்ல காலத்தில் சிலரையேனும் அனுசரித்து போயிருக்கலாமோ ..." என்றாள். அதன் பிறகு அவளிடம் வேறு பேச்சு மூச்சு இல்லை ஒரு நீண்ட மௌனம் எங்களிருவரிடையே . அதற்கு பின் ஒரு வார்த்தையும் அவள் பேசவில்லை அப்படியே இணைப்பை துண்டித்துக்கொண்டாள் . ஒருவேளை அவ்வேளையில் அவள் அழுதிருக்கக் கூடும். திருப்பி அழைக்கவில்லை... நானும்... இனி அவளிடம் பேசினால் என் பேச்சு அவளுக்குச் சுமையாகிவிடும் என்பதால் விட்டுவிட்டேன் . அவளுக்கு இப்போது ஒரு தனிமை தேவைப்பட்டது அதை அவள் எடுத்துக் கொள்ளட்டும் என்று நான் அவளைத் தனியாகவே விட்டு விட்டேன்.

பொழுது விடிந்தது காலை எழுந்ததும் முதல் வேலையாக அவளுக்கு போன் செய்தேன். முழு றிங் போய் கட்டானது. திரும்ப அடித்தேன் எடுத்தது வேறு யாரோ எடுத்தவர் அந்தப் பாட்டி இறந்துவிட்டார் என்றார். உடைந்து போனேன் . என்னால் அவள் மறைவை நம்பவே முடியவில்லை . நான் வேகமாக ஒரு ரோஜா பூ மாலை வாங்கிக் கொண்டு அந்த முதியோர் இல்லத்திற்குச் சென்றேன்.

மகன் மருமகள் வந்திருந்தார்கள் பேரன் விளையாடிக்

கொண்டிருந்தான். மருமகள் விளையாடிக் கொண்டிருக்கவில்லை மனம் விளையாடிக் கொண்டிருக்கலாம் அது அவள் முகத்தில் தெரிந்தது . ஆங்காங்கே அவளைக் காணவந்த ஒன்றிரண்டு பேரை காண முடிந்தது. வாங்கிச் சென்ற ரோஜா பூ மாலையை அவள் மீது போட்டேன். அவள் கழுத்தை சென்றடைந்ததும் அவையும் அப்போதே விரிந்ததைப் போல புதிதாய் தெரிந்தது. கழுத்தில் கிடந்த அவை அவளைப் பார்த்து எதோ சொல்வதை போலிருந்தது...

ஆம்! அவள் அப்படி தான்...

# 8. செல்ல மகள் செல்வி...

ஐயர் கெட்டி மேளம்... கெட்டி மேளம்... என்று கூற மேள தாளங்கள் முழங்க, மங்கள கீதம் இசைக்க, மாணிக்கம், சவிதா கழுத்தில் தாலியைக் கட்டி கூடியிருந்தவர்களைச் சாட்சி நிறுத்தி அவளை தன்னவள் ஆக்கிகொண்டான். கூடியிருந்தவர்கள் அத்தனை பேரும் அட்சதை தூவி ஆசி வழங்கினர்.

அட்சதை தூவியவர்களில் ஒருவர் கண்களிலிருந்து மட்டும் கண்ணீர் கன்னங்கள் வழியே வெள்ளி முத்துக்கள் போல உருண்டோடியது. யாரும் அதைப்பார்த்து விடக்கூடாது என்ற அவரது பிரயத்தனங்கள் அத்தனையும் வீணாய்ப் போனது. மணமகளின் தந்தை அதைக் கவனித்தார். அதைக் கவனித்த மாத்திரத்திலே மகிழ்வால் பூரித்துபோயிருந்த அவர் முகத்திலும் சொல்லொணா துயரம் ஒன்று குடிகொண்டது.

சிறிது நேரத்திற்கெல்லாம் இவர் போய் மணமகளின் தந்தையிடம் "குழந்தைகள் நல்லா இருப்பாங்க நான் கிளம்புறேன்டா" என்றார். உயிருக்குயிரான நண்பர்கள் இருவரும் மனம் ஒத்தொருமித்தவர்களின் மனதின் வலியைச் சொல்ல வார்த்தைகள் தேவையில்லை தானே.

அவருக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை எனினும் "சாப்பிட்டு விட்டுப் போடா " என்றார் அவ்வார்த்தையில் ஜீவன் இல்லை அவ்வார்த்தைகள் சம்பிரதாயத்திற்காக உதிர்த்தவையாகத் தான் தெரிந்தது. "குழந்தைகளைப் பார்த்ததிலே மனசு நெறஞ்சு போச்சுடா இனியொரு நாள் வீட்டுக்கு வருகிறேன்" என்றபடி அவர் பதிலுக்கு காத்திராமல்

பிடித்திருந்த கையைவிடுவித்துக் கொண்டு நடக்கத் துவங்கினார். சாப்பிடச் சொல்லி வற்புறுத்தவில்லை அவரும். பிடித்திருந்த கையை விடுத்து தரையை பார்த்த நேரம் அவரது கண்கள் மட்டும் பனித்திருந்தது.

கலங்கிய கண்கள், உடைந்த உள்ளம், தடுமாறும் கால்களுடன் நடக்கத் துவங்கியவர் மோகன் கையை விடுத்து கண் கலங்கியவர் வாசு.

இருபத்திஐந்து ஆண்டுகளுக்கு முன் வளைகுடா நாட்டில் வைத்துத் தான் முதன்முதலாக இருவரும் அறிமுகமானார்கள். ஒற்றை அறையைப் பகிர்ந்து கொண்டார்கள் ஆரம்பத்தில் பேச்சுலராக , பின் குடும்பஸ்தர்களாக, பின் தகப்பனாக என மாறிவந்த தங்கள் வாழ்க்கை பாதையில் அன்று முதல் இன்றுவரை தொடரும் நட்பெனும் அற்புத பந்தம் அவர்களுடையது.

அவர்களுக்குள் ஒளிவு மறைவென்பதே கிடையாது கட்டில் முதல் தொட்டில் வரை அத்தனையும் அலசி ஆராய்பவர்கள் அவர்களுக்குள் இரகசியம் என்று எதுவுமே இல்லை . வீட்டில் நடக்கும் மாமியார் மருமகள் சண்டை முதல் குடும்பத்தில் நிகழும் அத்தனை சுக துக்கங்களையும் பகிர்ந்து கொள்வார்கள் அவர்கள்.

இருவருக்கும் சொல்லிவைத்தாற்போல் தங்கச் சிலையென ஒற்றை மகள்கள் பிறந்தார்கள். வாசுவின் மகள் சவிதா. மோகனின் மகள் செல்வி. இருவருக்கும் மகள் என்றால் உயிர். மகள்கள் வளர வளர அவர்கள் ஆசையும் வளரத் துவங்கியது . மகளின் ஆசை அனாவசியமாக தெரியும் போது சில நேரம் கண்டிப்பும் பல நேரம் தன் கஷ்டத்தையும் சொல்லி அணை போடுவார் வாசு.

பிள்ளைகள் பெற்றோரின் கஷ்டம் அறிந்தே வளர வேண்டும் என்பது அவர் எண்ணம் . மகள் எதுவும் புதிதாக தேவையென அவரிடம் கேட்டாலும் மனைவியிடம் இது இவளுக்கு இப்போது அவசியமா என கலந்து கொண்டே வாங்கி அளிப்பார் அவர்.

ஆனால் மோகன் அப்படியல்ல தான் பட்ட கஷ்டம் எதுவும் மகள் படக்கூடாது என்பார். மகளைக் கஷ்டம் தெரியாமல் வளர்க்க வேண்டும் என்பது அவரது எண்ணம். எது கேட்டாலும் இல்லை எனும் சொல்லே அவரிடமிருந்து வராது. "இது இப்போது அவளுக்கு எதற்கு?" என மனைவி கேட்டாலும் "உனக்கு ஒண்ணும் தெரியாது போ நீ என " அவரை மட்டம் தட்டுவது அவரது வாடிக்கை. மகளிடம் நல்ல பெயர் வாங்க மனைவியை மட்டம் தட்டும் பல வெளிநாட்டு அப்பாக்களில் அவரும் ஒருவர் . அதனால் செல்விக்கும் இவரிடம் செல்லம் அதிகம்.

இதோ, இன்றைக்கு பத்தாங்கிளாஸ் றிசல்ட் சொல்லிவைத்தாற்போல் இருவரும் நல்ல மதிப்பெண்ணோடு தேர்ச்சி பெற்றுவிட்டார்கள்.

இருவரும் தங்கள் அப்பாக்களிடம் புதிதாக ஆன்ராய்ட்டு போண் வாங்கிக் கேட்டார்கள் . "இவளுக்கு இதெல்லாம் இப்போது அவசியம் இல்லை" என்ற தனது மனைவியின் ஆலோசனைகளுக்குச் செவி மடுக்கவே இல்லை மோகன். புது மாடல் போனையே வாங்கிக் கொடுத்தார் அவர். மகிழ்ச்சியில் திளைத்தாள் செல்வி.

புதிய மொபைலினூடே முகநூல் எனும் புதிய உலகு அவளுக்கு அறிமுகமானது.

வாசுவிடமும் கேட்டாள் சவிதா "அப்பா எனக்கு புதிய மொபைல் போண் ஒன்று வேணும்பா"

"உனக்கு இப்போது மொபைல் எதுக்கு?"

"நெட்ல நெறைய படிக்க வேண்டி இருக்குப்பா..."

"வீட்டில டேப்டாப் இருக்கு அம்மா கைல போண் இருக்கு அது உன்னோட தேவைக்கும் சேத்து தான் ... அப்றம் உனக்கெதுக்கு தனியா?"

"கூடப் படிக்கிற எல்லாரும் வெச்சிருக்காங்க அப்பா"

"கூடப் படிக்கிற அவங்களும் நாமளும் ஒண்ணுல்லம்மா அப்பாவுக்கு வெளிநாட்டில

ஏசிக்குள்ள இல்ல வேலை. இங்க இப்போது வெயில் ஐம்பத்தைந்து டிகிரி மேல கொஞ்ச நாள் முன்னமே தான் மூக்கு வழியாவும், வாய்வழியாவும் ரத்தம் வந்து மயங்கி விழுந்தேன். விழுந்ததில் பின்மண்டைல அடி, அஞ்சு தையல், பதினைந்து நாள் சம்பளமில்லா லீவு. நீங்க கஷ்டபடுவீங்களேன்னு தான் இத நான் சொல்லல கொஞ்சம் நம்ம குடும்ப சூழ்நிலையையும் புரிஞ்சுக்கோம்மா என்றார்"

இதைக் கேட்ட மாத்திரத்திலே எதிர்முனையில் மகளிடமிருந்து சத்தமில்லை . புரிந்தது அவருக்கு அழுகிறாள் அவள்.

"உன்னை கஷ்டப்படுத்தவோ இல்லை உனக்கு போண் வாங்கி குடுக்காம இருக்கிறதுக்காகவோ இத நான் சொல்லல. அப்பாவோட கஷ்டத்த கொஞ்சம் புரிஞ்சிக்கோ இப்போ போண் உனக்கு அவசியம் இல்ல; இப்போ அது உனக்கு ஆடம்பரம் ; அவசியமான தேவைகளுக்கே நாம அவஸ்தை படும் இந்த நேரத்துல ஆடம்பரம் நமக்கு அவசியமாம்மா என்றார்."

நா தழுதழுக்கச் சன்னமான குரலில் அவர் காதுகளில் வந்து விழுந்தது "என்னை மன்னிச்சிடுங்கப்பா"

இதை கேட்டுக்கொண்டு நின்ற மோகன் "ஏன்டா

புள்ள ஆசைப்பட்டா ஒரு போண் வாங்கி குடுத்தா நீயென்ன கொறஞ்சா போயிடுவ?"

"மக கேட்கிறது அவளுக்கு இப்போதைக்கு அவசியம் இல்ல அது கையடக்க சாத்தான்டா குழந்தைகளை நாசம் பண்ணிடும் மொத அவ நல்லா படிக்கட்டும் அப்றம் ஒன்றென்ன ஒம்பது வாங்கிகுடுத்துக்கலாம் என்றார்"

"காலத்துக்குத் தகுந்து போல யோசிடா இன்னும் நம்ம காலத்திலே இருக்காத இப்போ மொபைல் இல்லேன்னா யாரு பிள்ளைங்கள மதிப்பா...

அதுமட்டுமில்ல நாம படுற கஷ்டம் நம்மோட போனா போதாத அவங்க வேற தெரிஞ்சு அவங்களும் கஷ்ட படணுமாடா என்றான் மீண்டும் மோகன்"

"ஊர்ல இருக்குற பலர் நினைக்கிறது வெளிநாட்டுல எதோ ஆட்டினா காசு விழுற மரம் இருக்கு அதிலேயிருந்து தான் காசு எடுத்து அனுப்புகிறதா இங்க நாம படுற கஷ்டம் தெரியாம தாண்டா பல வெளிநாட்டுகாரன்ங்களோட பொண்டாட்டிங்க ஊதாரியாவும் பிள்ளைகள் ஒழுக்கம் இல்லாமலும் போறதுக்கும் காரணம் . நாம படுற கஷ்டத்தில பங்கெடுக்கவா சொல்றோம் கொஞ்சம் தெரிஞ்சிகிடட்டும் புருசன் படுற கஷ்டம் பொண்டாட்டியும் அப்பா படுற கஷ்டம் புள்ளைங்களும் கொஞ்சம் தெரியணும்டா தெரிஞ்சே தான் வளரணும் அப்போ தான் அவங்களுக்கும் கஷ்டமும் காசோட அருமையும் புரியும் " என்றான் தீர்க்கமாக.

"உன் கிட்ட பேசி ஜெயிக்க முடியாது நீ எதோ பண்ணீட்டு போ..." என்றபடி இன்றைக்குச் சமையல் என்னடா?" என்றான்.

"சாதமும், உனக்கு புடிச்ச முள்ளங்கி சம்பாரும் ,

கத்தரிக்கா பொரியலும் தான் என்றான் " வழக்கம் போல் இருவரும் அரட்டையடித்துக்கொண்டே உண்டனர்.

காலில் சக்கரம்கட்டிக்கொண்டே காலம் வேகமாகச் சுழன்றது. செல்வியின் கையில் மொபைல்

கிடைத்ததும் அவளில் பல மாற்றங்கள் நிகழத் துவங்கியது. அதிகம் தனிமையில் மொபைல் உபயோகிப்பதை விரும்பினார் . அம்மா உட்பட வேறொருவரும் தனது மொபைலை தொடுவதையும் அவள் விரும்புவதில்லை . தினமும் இருமுறை அப்பாவிடம் பேசுவது ஒருமுறையானது , அடுத்து இருநாளுக்கு ஒரு முறை என்றானது , இப்போதெல்லாம் அம்மா நியாபகப்படுத்தினால் ஓரிரு நிமிடம் சலித்துக்கொண்டே அப்பாவிடம் பேசுகிறாள் செல்வி.

முகநூலுக்கு வந்த பெரியவர்களே லைக்கிற்கும் கமெண்ட்க்கும் பித்துப் பிடித்தாற்போல் திரியும் போது சிறுவயதுகாரர்களுக்கு சொல்லியா கொடுக்க வேண்டும். படிப்பில் சுட்டியாக இருந்தவள் ஜெயித்தால் போதும் எனும் நிலைக்கு வந்து நின்றாள்.

அப்போது தான் அவளுக்குச் சிரிக்க சிரிக்க ரசிக்க ரசிக்க உண்மையை மட்டும் எழுதும் அந்தப் பிரபல பதிவர் அறிமுகமானார். முதலில் நண்பர்களாகத் தான் பழகினர். நட்பு நாளடைவில் காதலாய் மலர்ந்தது.

பனிரெண்டாம் வகுப்பு பரிட்சை முடிவு வந்தது . இரு பாடம் தோற்றுப் போனாள் செல்வி தோல்வியுற்றதுக்கும் தன் காதனுடன் செல்வதற்குமாக சேர்த்து ஒற்றைக் கடிதம் எழுதி வைத்துவிட்டுச் சென்றுவிட்டாள் செல்வி தனது முகநூல் காதலனுடன். அடித்துப் பிடித்து ஊர் வந்து சேர்ந்தான் மோகன் ஊரெல்லாம் தேடினார்கள் தகவல்

இல்லை. அங்கே இருக்கிறார்கள் இங்கே இருக்கிறார்கள் எனக் கண்டவர்கள் சொன்னார்கள் . மீண்டுமொரு கடிதம் வந்தது "திருமணமாகிவிட்டது தான் நலமாக இருப்பதாகவும் தன்னை தேடவேண்டாம் எனவும்." எங்கேயோ இருக்கிறாள் அவள் விருப்பப்படி போய்விட்டாள் எப்படியோ போகட்டும் நலமாக இருந்தால் போதுமென தலைமுழுகியதாய் சொல்லி விட்டுவிட்டார்கள் அவர்கள் அவளை.

திருமணம் முடித்த இருவரும் அவள் கொண்டு சென்ற காசு தீருமட்டும் ஊர்சுற்றியும் , பெரிய பெரிய ஹோட்டல்கள் அறைகளிலும், கடற்கரைகளில் உலா வருவதும் என மகிழ்ச்சியாகப் பொழுதை கழித்தனர். இவள் கையிலிருந்த காசு தீர்ந்ததும் அவன் சுயம் வெளிப்படத் துவங்கியது . காசுக்காகவும், நட்புக்காகவும் சிலருக்கு அவளை விருந்தாக்க முற்பட்டான் அவர்களிடமிருந்து தப்பித்தாள் செல்வி.

அவன் ஒரு பொய்யன் எனும் உண்மை உரைத்தது ; அது வலித்தது அவளுக்கு ; தான் செய்தது எத்தனை பெரும் தவறென்பது அப்போதே புரிந்தது. அத்துடன் அவளுக்கு வாழ்க்கை மீதே வெறுப்பு வந்தது. வாழும் ஆசை அறவே அற்றுப்போனது . திரும்ப அப்பா அம்மாவிடம் அழுதுகொண்டே செல்ல மனம் மறுக்க, நிமிட நேரத்தில் முடிவு செய்தாள் தற்கொலை செய்து கொள்ளலாம் என்று , மனம் மாறும் முன் ட்ரெயின் முன் பாய்ந்து தன் திட்டத்தை அரங்கேற்றினாள். செல்லமாக வளர்ந்தவள் உருதெரியாத வண்ணம் சிதறிப்போனாள்.

அத்துடன் வெளிநாட்டு வாழ்க்கையை உதறிவிட்டு வந்துவிட்டார் மோகன். சில ஆண்டுகளுக்குப் பின் வாசு தேடிக்கண்டுபிடித்த மணமகனுடன் அவர் மகள் சவிதாவிற்கு திருமணம் முடிவாகி முடிந்தது அதற்குச்

சென்று தான் திரும்பிக்கொண்டிருக்கிறார் அவர் . வாசுவிற்கும் செல்ல மகள் தான் சவிதா அவசியமான நேரங்களில் கண்டிப்பும் கஷ்டத்தையும் சொல்லி வளர்த்ததன் அவசியத்தை காலம் கடந்து புரிந்து கொண்டார் மோகன்.

இப்போதெல்லாம் மகள் செல்வி மீது எந்தக் கோபமும் இல்லை அவருக்கு . எப்படியேனும் ஒருமுறை அவளைப் பார்த்துவிட்டே கண்மூட வேண்டும் என்ற எண்ணமும் ஏக்கமும் மட்டுமே அவரிடம் மீதமிருந்தது . அவ்வழியே நடந்து செல்கையில் துணிக்கடையைப் பார்த்தார்.

மகளுக்கு மிகவும் பிடித்த ஆரெஞ்ச் கலர் சுடிதார் இரண்டு எடுத்துக்கொண்டார். இப்போது அவளுக்குக் குழந்தையும் இருக்குமே என்ற எண்ணத்தில் குழந்தைக்கும் வேண்டிய துணிமணிகளும் விளையாட்டு பொருட்களையும் வாங்கிக் கொண்டார். ஒரு நாள் தனது செல்ல மகள் செல்வி திரும்பி வருவாள் என்ற நம்பிக்கையோடே நடக்கத் துவங்கினார்... அவருக்குச் செல்வி இறந்துவிட்டாள் எனும் உண்மை தெரியாது அது இறுதிவரை அவருக்குத் தெரியாமலே இருக்கட்டும்...

## 9. ஒரு பக்க கதை...

*மாரி குவைத்தில் டிரைவர் . ஓரமாக ஒழுங்காக போய்கொண்டிருந்த அவனது காரை ஓவர் டேக் செய்யும் சாக்கில் அவனது காரின் வலது கண்ணாடியையும் பேர்த்தெடுத்து சென்றான் ஐந்தறிவு அரபியொருவன். காரை நிறுத்திவிட்டு வந்த அந்த அரபியோ எதோ இவன் தவறு செய்தது போல இவனை பார்த்தே ஏதேதோ இவனுக்கு புரியாத அரபியில் காட்டு கத்து கத்திவிட்டு சென்று விட்டான். அந்த பனிக்கரடிக்கு னைட்டி போட்டது போலிருந்த பக்கி.*

*மாரிக்கு வந்த கோவத்திற்கு இதுவே ஊராயிருந்திருந்தால், போடுற போடுல இந்நேரத்துக்கு நாலு பல்லு ரோட்டுல கெடந்து சிரிச்சிருக்கும், பிழைப்பு தேடிவந்த இடமென்று அத்தனையும் பொறுத்துக்கொண்டான். வளைகுடா நாடுகளில் இதை நினைத்தே பல்லை கடித்துக்கொண்டு காலத்தை ஓட்டும் பலருள் அவனும் ஒருவனாகிப்போனான் அவ்வளவே.*

*கம்பெனியில் சொன்னான் , கம்பெனி கையை விரித்துவிட்டது. வேறு வழியின்றி சொந்த காசில் , கண்ணாடியை மாற்றினான் , தினாரை எண்ணி கொடுக்கும் போது தான் நினைவுக்கு வந்தது ! ஐயோ! காலைல தான் அம்மா,*

*“டேய் மாரி ! பேப்பர் கூட படிக்க முடியமாட்டேங்குதுடா, கண்ணாடிய மாத்திக்குடுடா” என சொன்னவரிடம்,*

*"நீங்க என்னம்மா இனிமே பேப்பர் படிச்சு I A S பரிட்சையா எழுத போறீங்க. இருக்குறத வெச்சே*

அட்ஜஸ் பண்ணிக்கோங்க " என்று கூறிய தனது அலட்சிய பதில் நினைவுக்கு வந்தது.

குற்றம் உள்ள நெஞ்சு குறுகுறுக்கும் என்பது போல , மனம் குறுகுறுக்க உடனே போன் எடுத்தான் அழைத்தான் மனைவிக்கு , "இன்றைக்கே அம்மாவ கண் ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போய் கண்ண செக்பண்ணி புதிய கண்ணாடிய மாத்திக்கொடு" எனச்சொல்லி அழைப்பை துண்டித்தான்.

இப்போது மாற்றப்பட்டு இருந்தது புதிய கண்ணாடி . அதில் அவனது முகமும் தெளிவாய் , அழகாய், புதிதாய் தெரிந்தது அவனுக்கு . இப்போது மனமகிழ்வுடன் வாகனத்தை ஓட்டிச்சென்றான் மாரி...

## 10. நீலிக் கண்ணீர்

பாட்டி எனக்கு அழகழகான கதை சொல்வாள் . சில நேரம் தூங்க வைக்கக் கதை சொல்வாள் . சில நேரம் துயில் எழுப்பக் கதை சொல்வாள், சோம்பல் முறிக்க, சோகம் அறுக்க , குலுங்கிச் சிரிக்க , பயந்து நடுங்க இப்படிப் பல வகையாகக் கதை சொல்வாள் பாட்டி . சில நேரம் பாட்டியின் மடி மீது தலை சாய்த்துக் கதை கேட்பேன். குளிர் காலமென்றால் பாட்டியின் மார்பினில் ஒட்டிக்கொண்டு அவள் முந்தானைக்குள் புதைந்து கதை கேட்பது என்பது அலாதியானது . சில நேரம் பாட்டியுடன் நடந்து செல்கையில் கதை சொல்வாள். வயல் வெளிகளில் காலாற நடந்து கொண்டே பாட்டி சொல்ல கதை கேட்பதென்பது கொள்ளைப் பிரியம் எனக்கு.

இதோ இன்றைக்கும் பாட்டியின் கரம் பிடித்து வயல்வெளியில் நடந்து கொண்டிருக்கிறேன் கதைக்காய் பாட்டியின் வாயை நோக்கியபடியே...

பாட்டியின் பாம்படங்கள் காதினில் தேரில் தொங்கி நிற்கும் குஞ்சரம் போல ஆடிக்கொண்டிருக்கிறது . முதுமையின் அடையாளமாக முகம் முழுதும் சுருக்கு விழுந்திருக்கிறது. பல்லில்லா பொக்கை வாய் இருந்தும் பாட்டி எனக்கு அத்தனை அழகு , அம்மாவை விட எனக்குப் பாட்டி தான் அழகு , அக்காவைக் காட்டிலும் எனக்குப் பாட்டி தான் அழகு, ஏன்? நான் பத்தாம் வகுப்பு பார்த்தெழுதி பாஸ் ஆக அனுமதித்த பானுவை விட எனக்கு என் பாட்டி தான் அழகு...

எங்கள் ஊரின் அழகை வர்ணித்தால் அதைப் பார்க்கும் ஆசை உங்களுக்கும் வரலாம். எங்கள் ஊரின்

வளங்களைச் சொன்னால் அதைச் சோறு தண்ணி ஏதுவுமின்றி காதுகுளிரக் கேட்டுக்கொண்டே இருக்கலாம். எங்கள் ஊரின் அருமை பெருமை பற்றிச் சொன்னால் அகில் புகையின்றியே அவ்விடத்தை வாசம் ஆக்கிரமித்துக் கொள்ளும் அத்தனை வளம் பொருந்திய ஊர் எங்கள் ஊர்...

எங்கள் ஊரின் கடைக்கோடி ஒதுக்குப்புறமான பகுதியை நீலிமலை என்பார்கள் . பெயரில் உள்ள மலையை நிஜத்தில் நீங்கள் தேடினால் ஏமாந்து தான் போக நேரிடும். மரங்கள் அடர்ந்த காடு போன்ற பகுதி அது. மலை இல்லையே தவிர ஆள்நடமாட்டம் அதிகமின்றி அவ்விடத்தில் ஒரு அமானுஷ்யத்தை நம்மால் உணர முடியும் . எங்கள் ஊரில் சில வினோதங்கள் உண்டு , பொதுவாக இந்நீலிமலை பகுதிக்கு மதிய வேளையிலும், இருட்டிய பிறகும் யாரும் செல்ல மாட்டார்கள். எங்கள் ஊரின் பேச்சு வழக்கில் ஏமாற்ற பயன்டுத்தும் கண்ணீருக்கு "நீலிக்கண்ணீர் வடிக்காதே " எனும் பதம் அதிகம் பயன்படுத்தப்படுவதையும் கவனித்திருக்கிறேன்...

கர்ப்பம் தரித்து மூன்று மாதம் முழுமை பெற்றுவிட்டால் போதும் அதன் பின் கர்ப்பிணிப் பெண்கள் யாரும் எங்கள் ஊரில் இருப்பதேயில்லை . வாக்கப்பட்டு வந்தவர்கள் என்றால் சொந்த ஊர் சென்றுவிடுவார்கள். வாக்கப்பட்டு சென்றவர்கள் என்றால் குழந்தை பிறந்த பிறகே தாய்வீடு வருவார்கள். அவர்கள் தாய்மார்கள் பிரசவகாலங்களில் அவர்களுக்கு உதவியாக அவ்வூர் போய் தங்கிவிடுவது வழக்கம் . என்ன தான் தங்கத் தட்டிலே வைத்து மாமியார் சோறு ஊட்டினாலும் மண் தட்டில் வைத்து தாய் ஊட்டுவதற்கு இணையாகாது தானே . ஒரு பெண்ணுக்கு எப்போதுமே தாய் தாய் தான் மாமியார் மாமியார் தான். பேறுகாலத்தில் பெற்றவள் கூட

இருப்பதென்பது பெண்கள் வாங்கி வந்த வரங்களில் ஒன்றல்லவா...

கர்ப்பிணிகள் தங்கள் ஊருக்குச் செல்லும் வேளையிலும் ஊரைச் சுற்றியே செல்வார்கள் . நீலிமலையை தாண்டிச் செல்வதென்றால் பதினைந்து நிமிடத்தில் சென்று விடலாம் ஆனால் பத்து கிலோமீட்டர் ஊரைச் சுற்றியே கர்ப்பிணிப் பெண்களை அழைத்துச் செல்வார்கள் . இந்த நீலிமலைக்கும், நீலிக்கண்ணீருக்கும், கர்ப்பிணிப் பெண்களுக்கும் எதோ சம்மந்தம் இருக்க வேண்டும் என்பது திடமான என் நம்பிக்கை...

இந்த உலகில் உள்ள அத்தனை கதைகளும் எனது பாட்டிக்கு அத்துப்படி அப்படி இருக்கச் சொந்த ஊர்க் கதை மட்டும் தெரியாமலா இருக்கும் . ஆனால், பாட்டியிடம் இப்போதெல்லாம் இது போன்ற மர்ம கதைகள் கேட்டால் சொல்ல மாட்டாள் காரணம் பத்தாங்கிளாஸ் ஜெயித்தவன் பேய்க்கதை சொல்லக் கேட்கும் நாள்களில் மட்டும் நடுராத்திரி ஒண்ணுக்கு போகப் பாட்டியையும் எழுப்புவது வழக்கம். சொந்த செலவில் யார்தான் சூனியம் வைத்துக்கொள்ள விரும்புவார்கள்? அந்த கடுப்பிலேயே இதுபோன்ற கதைகளை பாட்டி இப்போதெல்லாம் எனக்குச் சொல்லுவதேயில்லை. இன்றைக்குப் பாட்டி நல்ல மூடில் இருக்கிறாள் இக்கதைக் குறித்து கேட்டாள் சொல்லுவாள்...

பாட்டிக்கு ரசிக்கும் திறன் அதிகம் இப்போதும் பாருங்கள் கூட்டமாய் பறந்து திரியும் ஒரு கூட்டம் பட்டாம்பூச்சிகளை ரசித்துக்கொண்டே வருகிறாள் . இப்போது கேட்க வேண்டாம், கேட்டாலும் சொல்ல மாட்டாள். பட்டாம் பூச்சிகளை கடந்து சென்ற பின் கேட்டுவிடுவோம். பட்டாம்பூச்சிகள் போய்விட்டது இப்பொழுது னைசா கேட்போம்

"பாட்டி இன்றைக்கு வெற்றிலை வாங்கிட்டியா பாட்டி?"

"ஏன்டா?"

"இல்லேன்னா நானே ஒரே ஓட்டமா ஓடிப் போய் வாங்கிட்டு வந்து குடுக்குறேன்"

"ம்ம்ம்"

"நானே உனக்கு வெத்தலைய இன்றைக்கு இடித்து குடுக்கிறேன் பாட்டி"

"என்னடா பாசம் பொங்கி வழியுது , தொரைக்கு இன்னைக்கு என்ன கதை தெரியணுமாம்?"

நான் சிரித்த முகமாய் பாட்டியின் கரங்களை பற்றிப் பிடித்தபடியே,

"பாட்டி எப்படி பாட்டி கண்டுபுடிச்சா!"

"டேய்! மாடு வால தூக்குகிறது எதுக்குன்னு தெரியாதாடா நீ மேல சொல்லு"

பாட்டி நீலிக்கண்ணீருக்கும் நம்ம நீலி மலைக்கும் என்ன சமந்தம்? அப்றம் பாட்டி , கர்ப்பிணிப் பெண்கள் வேற நம்ம ஊர்ல இருக்குறதே இல்லியே ஏன் பாட்டி? எனக் கேட்டு வைத்தேன்...

பாட்டி என்னை ஒரு மாதிரியா பார்த்துட்டு ஏன்டா உனக்குக் கதையை சொல்லிட்டு என் தூக்கத்த நானே கெடுத்துக்கவா மாட்டேன் டா...

சத்தியமா பாட்டி, ஒண்ணுக்கு போக உன்னத் தூக்கத்திலிருந்து எழுப்பவே மாட்டேன் . இப்போது எனக்குத் தைரியம் வந்தாச்சு என்னைய நம்பு பாட்டி என்றவாறே பாட்டியின் தோள்மேல் கைபோட்டு கன்னத்தைக் கிள்ளி கதைக்கு லஞ்சமாக சில பல முத்தத்தைக் கொடுத்து பாட்டியை நம்வழிக்கு இழுத்து கதையை சொல்லத் துவங்க வெச்சாச்சு...

முன்னொரு காலத்தில் நடந்த கதை இதுடா ... எனச்சொல்லி கதையை சொல்லத் துவங்கினாள் பாட்டி... இப்போது மனிதர்கள் நடமாட்டமே இல்லாமல் புதர் மண்டி கெடக்கே நீலிமலை, இங்கே தான் தர்மலிங்க சாஸ்திரியென்று ஒரு மிகப்பெரிய மந்திரவாதி இருந்தானாம் . அவன் தனக்கு தேவையான வேலைகளைச் செய்ய பேய், பிசாசுகளை தன் மந்திரசக்தியால் கட்டுப்படுத்தி வெச்சுக்கிறது வழக்கமாம். அவனுக்கு சத்தியவதின்னு அழகான மனைவி ஒருத்தியும் இருந்தாளாம் . ஆனா பாவம் திருமணமாகியும் ரொம்ப வருசமா அவங்களுக்குக் குழந்தை இல்லியாம்.

ஒருநாள் இதுபோல மந்திரவாதி வெளிய போன நேரம் நீலீங்ற பேய பார்த்தாராம்...

நீலிங்ற பேய பாத்தாராம்ன்னு சொன்ன பாட்டி கதையை நிறுத்தி , வாய்க்கால்ல விளையாடீட்டு கெடக்குற இரண்டு கெளத்திமீனை ரசிச்சிட்டு நிக்குறா, மீன் கொஞ்சம் பெருசு தான் இரண்டு மீனையும் சேர்த்து ஒருநாள் ஒரு குடும்பம் தாராளமா சமச்சு சாப்பிட்டுடலாம் . பாட்டி இடுப்பில் வயலுக்குப் போனா எப்போதும் சின்ன அருவா ஒன்று தொங்கி கிடக்கும். நான் அத எடுத்து

"பாட்டி! மீன வெட்டி பிடிச்சு வீட்டுக்குக் கொண்டு போவோமா, அம்மா சந்தோஷபடுவா"ன்னு கேட்க வந்திச்சே பாட்டிக்கு கோவம்

"ஏன்டா படுவா, உன் தாத்தன போல இருக்க உழைக்கணும், தின்னணும், உறங்கனும் கொஞ்சம் உன்னைச் சுற்றி இருக்கிறதையும் ரசிடா " எனச் சொல்லி என்னை வெறுப்பேற்ற,

"ரசிக்குறத எல்லாம் நான் பாத்துக்குறேன் நீ காக்க வைக்காம மேல கதைய சொல்லு பாட்டி " எனக்

கதையை நியாபகபடுத்திவிட தொடர்ந்தாள் பாட்டி...

“அந்த நீலீங்ற பேய் ஒரு பொல்லாத பேய்டா அத தன்னோட மந்திரசக்தியால கட்டுப்படுத்தி அதோட தலையில் ஒரு பெரிய ஆணிய அடிச்சு வீட்டுக்கு அழைத்து வந்தானாம் அந்த மந்திரவாதி...”

"பாட்டி அதான் மந்திரசக்தியால கட்டுப்படுத்தியாச்சே அப்றம் எதுக்கு இப்படி தலையில் ஆணி அடிச்சாராம்ன்னு " அப்றாணியா கேட்ட என்னிடம்,

“அது மந்திர சக்தியுள்ள ஆணிடா நீலி பொல்லாத பேய் அந்த ஆணி தலையில் இருக்கிறது வரை தான் நீலி அவருக்கு கட்டுப்படுவா.”

கோரமா இருந்த நீலிய அழகிய இளம் பெண்ணா உரு மாற்றியிருந்தான் அந்த மந்திரவாதி.

மனைவி கிட்ட , இது பேய்ன்னு சொன்னா பயப்படுவாளேன்னு நெனச்சு பேய்ன்னு சொல்லாம...

"இவள உனக்குக் கூட மாட ஒத்தாசைக்கு வெச்சுக்கோ. இவ என்ன கேட்டாலும் குடு பிரச்சனை இல்ல, ஆனா இவளுக்குத் தலைக்கு தேய்க்க எண்ணெய்யும், இவ தலைல பேன் மட்டும் நீ பார்த்து குடுக்க கூடாது"ன்னு மிகக் கண்டிப்பா சொல்லிட்டாராம்...

புருசன் வார்த்தையை மீறாதவா சத்தியவதி . அவர் சொன்னத அப்படியே செய்து வந்தா , நாட்கள் மாதங்கள் ஆனது மாதங்கள் வருடங்கள் ஆனது அவர்கள் வாழ்விலும் வசந்தம் வந்தது . சத்தியவதி கர்ப்பிணி ஆனா , கோவில் சிற்பமென நிறைமாத கர்ப்பிணியா நிறைவாய் இருந்தாள் சத்தியவதி...

வருடகணக்கில் குளிக்காம, தலைசீவாம இருந்த நீலி

தலை முடியெல்லாம் சிக்கு பிடித்து பேனால தலையில் புண் வந்து சீழ்வடிய ஆரம்பித்து அலங்கோலமா மாறிட்டா. ஒருநாள் ஓவென கதறி அழ ஆரம்பித்தாள் நீலி , இத்தன வருசமா கூட இருக்குறவளோட கண்ணீரைக் கண்டதும் சத்தியவதிக்கு பொறுக்க முடியல அருகில போய் "ஏன் இப்படி கண்ணீர் வடிக்கிற?" எனக் கேட்க

நீலி சொன்னா எனக்கு தலையெல்லாம் வலிக்கிறது , பேன் கடிக்கிறது , நான் தலை சொறிந்து சொறிந்து தலையெல்லாம் புண்ணாப்போச்சு இத்தன வருசமா உங்க கிட்ட வேலை செய்யுறேனே அக்கா, எத்தாசும் கேட்டிருப்பேனா? தலைவலிக்குது தலை தேய்த்து குளிக்க சோப்பும் கொஞ்சம் எண்ணெய்யும் மட்டும் குடுங்கக்கா, உங்க தங்கச்சின்னா இப்படி என்னைய விட்டுருப்பீங்களான்னு கேட்டு மீண்டும் சிறுகுழந்தை போல விம்பி விம்பி அழ துவங்கினா நீலி...

கால ஓட்டத்தில் கணவன் சொல்லியிருந்த தலைக்கு தேய்க்க எண்ணெய் குடுக்க கூடாது என்பது மறந்து போயிருந்தது சத்தியவதிக்கு . வெள்ளந்தியான சத்தியவதி நீலியோட கண்ணீரை உண்மைன்னு நம்பி எண்ணெய் எடுத்து குடுத்தா அதை நல்லா தேய்த்து குளித்து முடிச்சு வந்த நீலி கொழு கொழு மொளு மொளுன்னு அழகாகவே தான் இருந்தா மீண்டும் ஓவென்று கண்ணீர் விட துவங்கினா...

"அக்கா, உன் தங்கைன்னா தலைபூரா பேனாயிருக்கிற என்னை இப்படியே விட்டுருப்பியா?"

எனப் பாவமாய் கேட்டு கண்ணீர் மல்க சத்தியவதியை பார்க்க இயற்கையிலேயே இரக்கம் குணம்

கொண்ட சத்தியவதி மனம் இரங்கி சீப்பை எடுத்து அழகா நீலிக்குத் தலைவாரி, பேன் பார்க்க துவங்கினா

*அப்போது தான் முன்ன தன் புருசன் நீலி தலையில் அடிச்சு வெச்சிருந்த ஆணி அவ கைல தட்டுபட்டிச்சி... எனச் சொல்லி வந்த பாட்டி கதைய அங்கேயே நிறுத்திவிட்டு,*

*தன் தாடையை கையால் தடவியபடியே காகம் ஒன்று தன் குட்டிக்கு உணவளிப்பதை பார்த்து ரசிச்சிட்டு நிக்குறா...*

*வந்ததே எனக்கு கோவம் "நீ இப்போ மிச்ச கதையை சொல்ல போறியா இல்லையான்னு" சத்தத்த கொஞ்சம் கூட்டி ஒரு மொறப்பு மொறச்சு நின்றேன் பாருங்க நான்*

*இத எதிர்பார்க்காத பாட்டி, என்ன அப்படியே மேலேயும் கீழேயுமா எகத்தாளமா ஒரு பார்வை பார்த்தா...*

*பாட்டி வாய் திறந்து எதுவும் சொல்லாட்டியும் அந்த பார்வையோட அர்த்தம் புரிந்தது எனக்கு 'உன் தாத்தனுக்கே பயப்படாதவ நானு நீயெல்லாம் சுண்டக்கா பய உனக்கா பயப்பட போறேன்' என்பது போல் இருந்தது அப்பார்வை. பாட்டியிடம் மொறச்சு காரியம் சாதிக்க முடியாதுங்றது நல்லாவே தெரியும் எனக்கு. அதனால பாட்டிய இடுப்போட கட்டி புடிச்சு வயிற்றிலேயே சில முத்தங்களை குடுக்க துவங்கிட்டேன். நான் குடுத்த முத்தம் பாட்டிக்கு கிச்சு கிச்சு மூட்டி விடப் பாட்டி சிரிச்சிட்டே "டேய் ... விடுடா... விடுடா... சொல்றேன்டா... சொல்றேன்டா..." எனச் சொன்ன அந்நேரம்...*

*என்னோட கண்ணுல படுது தூரத்து வயலில் இரண்டு பாம்புகள் பின்னி பெணஞ்சு விளையாடிக்கொண்டிருப்பது. அது பாட்டி கண்ணுல மட்டும் பட்டிச்சுன்னா போச்சு, மறுபடியும் கதய நிறுத்தி அத ரசிக்க தொடங்கிடுவா அதனால அது*

*பாட்டி கண்ணுல படாம பாட்டிய திருப்பி அழைத்துக்கொண்டு போகத் துவங்கினேன் நான் . நல்ல வேள நான் எதிர்பார்த்தது போல அது பாட்டி கண்ணுல படாததால மீண்டும் கதையை சொல்ல துவங்கினா பாட்டி...*

*ஆர்வமா கேட்க துவங்கினேன் நான்...*

*ஆணி சத்தியவதியின் கைல தட்டுப்பட வலித்தது போல நடித்த நீலி கண்ணீர் வடித்துக்கொண்டே ஐயோ! பாத்திங்களா அக்கா உங்க புருசன் பண்ணி வெச்சிருக்கிற அநியாயத்தை, தலையில் இருக்குற ஆணி உசுரு போற அளவுக்கு வலிக்கிறதுக்கா எனச் சொல்லி ஓயாம கண்ணீர் வடிச்சிட்டே இருந்தத பார்க்க சகிக்காத அப்பாவி சத்தியவதி , நீலியோட சூழ்ச்சி புரியாம அந்த ஆணிய பிடுங்கி விட்டா..!!*

*பிடுங்கிவிட்ட அடுத்த நொடி நீலி வெறி பிடிச்ச பெரும் பேயா மாறி வீட்டு முன்ன நிக்குற பனைமரம் அளவு வளந்து நின்னா ! வளந்து நின்னவ நிறைமாத கர்ப்பிணியா இருந்த சத்தியவதி வயிற்றுல ஒரே அடி அடிச்சி வயிற்றைக் கிழித்து குழந்தையைத் தூக்கி முற்றத்திலே வீசிஎறிந்துவிட்டு அவ குடலை உருவி மாலையா போட்டுவிட்டு வெறியோட சிரித்துக்கொண்டே அங்கேயே நிக்குறா தன் மந்திரசக்தியால எதோ விபரீதம்ங்றத உணர்ந்த மந்திரவாதி இங்க வாறதுக்குள்ள எல்லாம் முடிந்திருந்தது. இவன பார்த்ததுமே நீலி மீண்டும் கொடூரமா சிரிச்சிட்டே தப்பித்து ஓடிட்டா , அப்றம் தனிமையா இருந்த மந்திரவாதியும் மனைவி குழந்தை இறந்த துக்கம் தாளாம கொஞ்ச நாள்ள செத்து போய்ட்டானாம்...*

*நீலி தன் கண்ணீர ஆயுதமாக்கி சத்தியவதிய ஏமாற்றி கொன்னதுனால தான் பொய்யா கண்ணீர்விடுற எல்லாரையும் பார்த்து ஏன்டா 'நீலி கண்ணீர்'*

வடிக்குறேன்னு கேக்குற பழக்கம் வந்திச்சு. அதோட வெறி அடங்காத நீலி இப்போவும் இங்க தான் சுத்தி திரியுறா. நிறைமாத கர்ப்பிணி பெண்களைக் கண்டா அவ விடமாட்டா, அதனால தான்டா நம்மூர்ல கர்ப்பிணிப் பெண்கள் யாரும் இருப்பதில்லை'' எனச் சொல்லி பாட்டி கதையை முடித்தாள்...

வழக்கம் போல இரவு உணவை முடித்து பாட்டி பக்கத்துலயே பாட்டியை இறுக்க கட்டியணைத்து படுத்துறங்கினேன். இரவு மணி ஒன்று ''பாட்டி ... பாட்டி... ஒண்ணுக்கு போகணும் பயமா இருக்கு வா பாட்டி... எங்க பார்த்தாலும் பனைமர உயரத்தில் நீலி நிக்குறதுபோலயே தெரியுது பாட்டி ...'' என மெல்ல அழைத்தேன் பாட்டியை . ''டேய், காதில கிள்ளி வெச்சுக்கோடா இது தான் நான் உனக்கு சொல்லுற கடைசி கதை'' என வழக்கமாகச் சொல்லும் வசனத்துடனே என் கரம்பிடித்து அழைத்துச் செல்கிறாள் பாட்டி.

என்னுடைய பாட்டி நல்லவள் இனியும் எனக்கு அவள் கதை சொல்வாள்...

# 11. எல்லாம் நன்மைக்கே...

வாழும் போது ஒன்றாய் ஒற்றுமையாய் வாழ்ந்த நரைவிழுந்த அம்முது மூத்த தம்பதியர் இறக்கும் போதும் ஒன்றாகவே இறந்து ஏறிப்போயினர் வானுக்கு. அங்கே அவர்களை தடுத்து நிறுத்தியது மிகப்பெரிய நுழைவாயில் கதவொன்று அதை காவல் காக்கிறவன் அவர்களிடம் வந்தான் . சிறிது நேரம் அவர்களை அங்கே காத்திருக்கும் படி கூறிவிட்டு அவர்களுடைய பாவ புண்ணிய கணக்கு புஸ்தகத்தை எடுத்து வந்தான் . வந்தவன் புஸ்தகத்தை புரட்டி பார்த்து விட்டு உங்களுக்கு சொர்க்கம் கிடைத்திருக்கிறது.

நீங்கள் இனி அங்கே போய் நிம்மதியாய் இருக்கலாம் என்று கூறி நுழைவாயிலை திறக்க போனான், அதற்கு அத்தம்பதியில் அந்த அம்மா கோபத்தில் அவனைப்பார்த்து "வாழும்போது பூமியில் எங்களுக்கு நரகத்தை கொடுத்துவிட்டு இப்போது சொர்க்கம் எதற்கு ? பூமியில் நரகத்தை கொடுத்த கடவுளை பார்க்காமல் இவ்விடம் விட்டு ஒரு அடி கூட நகரமாட்டோம்" என்றார்.

உடனே அவருக்கு ஆதரவாக அவர் கணவரும் "இங்கேயே உட்காருமோம்ம்மா கடவுள் வரட்டும் வந்து அவரிடம் நாலு வார்த்தை கேட்டதுக்கப்புறமே போகலாம்" என்றார். உடனே இருவரும் அவ்விடம் உட்கார்ந்து விட்டனர் . பேசிப்பார்த்தான் அவன் பலனில்லை, அவர்கள் மனதை மாற்ற முடியாதென்பதை உணர்ந்து கொண்டவன் கடவுளை அழைக்க சென்றான். கையோடு கடவுளை அழைத்து வந்தான்.

காற்றிலிருந்து காட்சியானார் கடவுள் ஒளிபொருந்திய அவர் முகத்தை நேருக்கு நேர் பார்க்க அவர்கள் கண்கள் கூசிற்று. சாந்தசொரூபியான அவர் முகத்தை பார்த்ததும் அவர்கள் கோபமெல்லாம் பறந்து போயிற்று.

நா தழு தழுக்க சன்னமான குரலில் அந்த அம்மாவே பேசினார் "உங்களுக்கு இரக்கமே இல்லையா ? எத்தனை நாள் அழுது புலம்பினோம் . உங்களை ஒவ்வொரு நாளும் எத்தனை முறை அழைத்தோம் . நீங்கள் செவி சாய்க்கவே இல்லையே . அப்படி நாங்கள் என்ன தவறு செய்து விட்டோம் ? கோவில்களில் இருப்பதாய் சொன்னார்கள் அங்கே வந்து அழைத்து பார்த்தோம் நீங்கள் கண்டு கொள்ளவே இல்லை . சர்ச்சுகளில் இருப்பதாய் சொன்னார்கள் அங்கேயும் வந்தோம் நீங்கள் திரும்பியும் பார்க்கவில்லை . தர்க்காக்களிலும் வந்தோம் நீங்கள் எட்டியும் பார்க்கவில்லை. இன்னும் நீங்கள் இருப்பதாய் சொன்ன எந்தவொரு இடத்தையும் நாங்கள் விட்டு வைக்கவில்லை.

எங்கெங்கு நாங்கள் வந்த போதும் நீங்கள் எங்களை கண்டு கொள்ளளவே இல்லையே ஏன்? ஒரு குழந்தை இல்லாததால் நாங்கள் பட்ட பாடும் எங்களுக்கு கிடைத்த அவமானமும் விட்ட கண்ணீரும் உங்களுக்கு தெரியுமா ?! என்று உணர்ச்சி ததும்ப பேசிய போது அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் முத்து முத்தாய் விழுந்தது . துக்கம் தொண்டையை அடைத்துக்கொண்டு வர சிறு பிள்ளை போல் தேம்பி தேம்பி அழ துவங்கினார் அடுத்து அவரால் பேச முடியாமல் போயிற்று . அழுத மனைவியின் தோள்களை தட்டி தேற்றிய கணவன் கவலை தோய்ந்த குரலில் அவரே தொடர்ந்தார்.

"வாழும் போது பூமியில் எங்களுக்கு நரகத்தை

தந்துவிட்டு இங்கு சொர்க்கம் என்றால் என்ன அர்த்தம். அது எங்களுக்கு வேண்டவே வேண்டாம் . ஏன் எங்களுக்கு ஒரு குழந்தையை தரவில்லை அதற்குரிய காரணத்தை சொல்லுங்கள் போதும் . சொல்லாவிட்டால் நாங்கள் இவ்விடம் விட்டு நகர மாட்டோம்" என்றார். இப்போது அவர் கண்களிலிருந்தும் கண்ணீர் பெருமழையென சொரிய துவங்கியது. இப்போது அந்த அம்மா தன் கணவரின் கண்ணீரை துடைத்து அவரைத் தேற்றினார்.

அவர்கள் பேசுவதை அமைதியாக கேட்டு கொண்டு நின்ற கடவுள் அவர்களிடம் ஒரு வார்த்தையும் பேசவில்லை. அவர் முகத்தில் ஒரு சலனமும் இல்லை. அமைதியாக தன் கையை மேகத்தை நோக்கி சூண்டிக்காட்டினார். அக்கணமே மேகம் விலகியது பூமி தெரிய துவங்கியது . அழகான மரங்களடர்ந்த சோலை போன்ற இடம் அது அதனுள்ளே ஆசிரம் போன்ற இடம் ஒன்று தெரிந்தது . அவ்விடத்தே சில நூறு பிள்ளைகள் மனமுருகி பிராத்தித்து கொண்டு இருக்கிறார்கள். அத்தனை பேர் கண்களிலும் கண்ணீர் வழிந்தோடிக்கொண்டிருக்கிறது. அவர்கள் முன் இவர்கள் இருவர் போட்டோவும் அலங்கரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கிறது.

அதை அங்கிருந்தபடியே அத்தனை பேரும் கண்டனர் இப்போது கடவுள் பேச துவங்கினார் "உங்களுக்கும் ஒரு குழந்தை பிறந்திருந்தால் நீங்களும் மற்றவர்கள் போல அந்த ஒற்றை பிள்ளைக்காய் பாடுபட்டு உழைத்து மரித்திருப்பீர்கள். என்னுடைய இத்தனை பிள்ளைகளை யார் கவனித்திருப்பார்கள் ? நீங்கள் நல்லவர்கள் அதனால் தான் எனது பிள்ளைகளை பார்த்துக்கொள்ள உங்களை தேர்ந்தெடுத்தேன் . உங்களுக்கு ஒரு குழந்தை பிறந்திருந்தால் இந்நேரம் அவன் ஒருவன் மட்டும் உங்களுக்காய் பிராத்தித்திருக்க கூடும். இப்போது பாருங்கள்

என்னுடைய எத்தனை பிள்ளைகள் உங்களுக்காய் அழுகிறார்கள் பிராத்திக்கிறார்கள்.

நீங்கள் நற்குணம் உள்ளவர்கள் என் வேலையை செய்ய தகுதியானவர்கள். அதனால் தான் நான் உங்களை தேர்ந்தெடுத்தேன். இதோ, நீங்கள் செய்த புண்ணியத்தின் பலனை இனி சொர்க்கத்தில் அனுபவியுங்கள். பூமியில் நடக்கும் நல்லது கெட்டது துவங்கி ஒவ்வொன்றும் நன்மைக்கே தான் அதைப் பலராலும் புரிந்து கொள்ள முடிவதே இல்லை" என்று கூறி முடித்தார்.

அத்துடன் அவர்கள் சந்தேகம் தீர்ந்தது துக்கம் , துயரம் அவர்களை விட்டு பறந்தது . இருவரும் தங்கள் கண்களை துடைத்தனர் . கடவுளை பார்த்து புன்முறுவலொன்று பூத்தபடி நன்றியோடு கையெடுத்து கும்பிட்டு "எல்லாம் நன்மைக்கே " என்றபடி சொர்க்கத்தை நோக்கி நடக்க துவங்கினர்...

## 12. ராஜாவும் ரம்யாவும்...

ராஜாவும், ரம்யாவும் ஒருத்தரையொருத்தர் புரிந்து கொண்ட அன்பான தம்பதி தான். ஆனால், மாமியார் கூட இருக்கிறது மட்டும் சுத்தமா ரம்யாவுக்கு பிடிக்கிறதே இல்லை . அவங்களை முதியோர் இல்லத்துல கொண்டு போய் விட சொல்லி அடிக்கடி சண்டை போடுவா , அவனும் சமதானம் சொல்லி சமாளித்துக்கொண்டே வந்தான் . இன்னைக்கு முடிவாவே சொல்லீட்டா,

"ஒண்ணு நான் இந்த வீட்ல இருக்கணும்,

இல்ல உங்க அம்மா இருக்கணும், நீங்களே முடிவு பண்ணிக்கோங்கன்னா"

ரம்யா பிடிவாதக்காரி, இனி அவ கூட பேசி ப்ரயோஜனமில்லை என்பதை உணர்ந்தான் ராஜா . வேறு வழியின்றி அவள் முடிவிற்கு ஒத்துக்கொண்டான்.

ஒத்துக்கொண்டவன் "ரம்யா நீ எனக்கு ஒரு உதவி பண்ணணும் என்றான்"

பொறுமையாவே கேட்டா "நான் என்ன பண்ணணும் சொல்லுங்க" என

"பள்ளிக்கூடத்துல எனை சேர்த்தது முதல் ... உன்னை எனக்கு கல்யாணம் பண்ணி வெச்சது வரை ... எனக்கு எதுவெல்லாம் பிடிக்குமோ அதையெல்லாம் எனக்காக பார்த்து பார்த்து பண்ணினவங்க என்னோட அம்மா. அதனால எல்லா வசதியும் உள்ள ஒரு நல்ல முதியோர் இல்லமா பார்த்து கொண்டு போய் விட வேண்டியது என்னோட கடமை . நான் இருக்கிற

பிஸ்சியில என்னால அத எல்லாம் பார்த்து பண்ண முடியாது என்கிறது உனக்கே தெரியும் . அதனால எனக்காக நீ தான் இந்த உதவிய பண்ணிக்குடுக்கணும் என்றான்."

அதற்கு முழுமனதோடு ஒத்துக்கொண்டாள் ரம்யா...

நீ இன்னொரு உதவி கூட எனக்காக பண்ணணும் ரம்யா என சொல்லி தொடர்ந்தான் ராஜா...

அப்பா இல்லாம என்னை வளர்த்ததாலயோ என்னமோ, என்னோட அம்மாவுக்கு என்னைத் தவிர வேற உலகம் தெரியாது . என்னையே நம்பி இருந்ததால வெளி உலகம் தெரியாத வெள்ளந்தியாவே இருந்திட்டாங்க . நீ செலட் பண்ணுற முதியோர் இல்லத்துல எப்படி நடந்துக்கணும், யாரெல்லாம் நல்லவங்க, இத மட்டும் கொஞ்சம் விசாரிச்சு, நீ பார்த்து பழகிட்டு வரணும் , அப்றமா நாம அம்மாவ அங்க கொண்டு போய் சேர்த்திடலாம், அதுக்கப்புறம் அவங்க அங்க எந்த பிரச்சனையும் இல்லாம இருப்பாங்க இல்ல ... என்றவன் மேலும்,

முதியோர் இல்லத்துல உள்ளவங்கள பத்தி முழுசா தெரிஞ்சு வர , நீ தொடர்ந்து ஒரு வாரம் தினமும குறைந்த பட்சம் ஒருமணிநேரமாவது அங்க உள்ளவங்க கூட செலவு பண்ணணும் என்றான்...

ஓ தாராளமாங்க, என மலர்ந்த முகத்தோடு ஒத்துக்கொண்டாள் ரம்யா...

நாம முதியோர் இல்லத்தில அம்மாவ கொண்டுவிட போறது இப்போதைக்கு அம்மாவுக்கு தெரிய வேண்டாம் என்றான் ராஜா ... அதுவே தான் ரம்யாவுக்கும் சரியெனப்பட்டது...

ரொம்ப ஆர்வமா தேட துவங்கினா முதியோர் இல்லங்களை... அடுத்த நாளே ஏசி ரூம் வசதியுள்ள

முதியோர் இல்லத்த கண்டுபிடிச்சு வந்தா ரம்யா ... அதனோட அருமை பெருமையெல்லாம் வேலை முடிச்சு வீட்டுக்கு வந்த ராஜா கிட்ட சொல்லி சிலாகித்துக் கொண்டாள்.

அமைதியாக கேட்டுக்கொண்டான் ராஜா...

அடுத்த நாள் முதியோர் இல்லம் போய் வந்த ரம்யா அங்க உள்ள பெரியவங்கள பத்தியெல்லாம் சொன்னா... அவளை அங்க உள்ள எல்லாருக்கும் ரொம்ப பிடிச்சு போனதா பெருமையோடே சொன்னா...

அதையும் அமைதியாக கேட்டுக்கொண்டான் ராஜா...

அடுத்த நாள் முதியோர் இல்லம் போய் வந்ததாக சொன்னாள் ரம்யா ... அங்கே நடந்த சம்பவங்கள் எதையும் அவனுக்கு அவள் அன்றைக்கு சொல்லவில்லை... அவனும் அதை பற்றி எதுவும் கேட்கவில்லை... அமைதியாவே இருந்தான்...

அடுத்தடுத்த நாட்களிலும் அவள் எதுவும் சொல்லவில்லை... அவள் போய் வருவதை மட்டும் உறுதி செய்து கொண்டான் ராஜா...

அவன் சொல்லியிருந்த நாட்கள் முடிந்தது . இன்றைக்கு தான் அம்மாவை முதியோர் இல்லம் கொண்டுவிட வேண்டிய நாள் அவன் ப்ரஷ்ஷாகவே இருந்தான். அவளிடம் சிறிது பதட்டம் தெரிந்தது . ராஜா ரம்யாவை அழைத்தான் "வா ரம்யா நான் அம்மா கிட்ட சொல்றேன் அவங்கள கொண்டு போய் முதியோர் இல்லத்தில விட்டுட்டு வரலாம்'' என

கையை பிசைந்த படி வந்த ரம்யா அவன் கையை பிடித்துக்கொண்டு சொன்னாள் "வேண்டாங்க அவங்களும் நம்ம கூடயே இருந்துடட்டும் , தனிமையா இருக்கும் பெரியவங்க ரொம்ப பாவங்க" என்று சொன்னவள் மேலும் தொடர்ந்தாள்... இப்போ

நீங்க எனக்கொரு உதவி பண்ணணும் "நாம வாரா வரம் சினிமாவுக்கு போற நேரத்துக்கு பதிலா அந்த முதியோர் இல்லம் போய் வரலாமாங்க ? அங்க இருக்குறவங்களுக்கு காசு , பணம் எதும் தேவையில்லேங்க அன்பா, அக்கரையா பேசுற நாலு பேர் தாங்க வேணும் " எனக்கேட்டு அவனை பரிதாபமாக பார்த்தாள்...

அவன் சம்மதம் அன்பு முத்தத்தோடே அவளுக்கு கிடைத்தது. இப்போது அவன் அணைப்பிற்குள் இருந்த அவளிடம் திரும்ப அவன் கேட்டான் "அம்மாவின் மாற்றமுடியா குறை சொல்லும் பழக்கத்த நீ எப்படி சமாளிக்க போகிற'' என

அதற்கு அவள் "காது கேட்காதது போல இருந்துட்டு போறேங்க, கொஞ்ச நாள்ள அவங்களே மாறிடுவாங்க என நம்பிக்கையோடே சொன்னாள்..."

பெண்கள் கொஞ்சம் பிடிவாதக்காரர்கள் தான் , ஆனால் அன்பானவர்கள். அவர்களை அவர்களுக்கு புரிய வைக்க கோபமல்ல கொஞ்சம் பொறுமையே தேவைப்படுகிறது ஆண்களுக்கு, இந்த ராஜா போல...

## 13. மாமியார் மகாலட்சுமியும் மருமகள் தனலட்சுமியும்...

சுபதினமொன்றில் ஊரார் அட்சதை தூவி ஆசிவழங்க தங்க நிறத்தழகி தனலட்சுமியை தங்க தாலி அணிவித்து தன்னவள் ஆக்கி கொண்டான் மாணிக்கம். மணமுடித்து தன்மகனுடன் தன்வீட்டு முன்வந்து நின்ற தங்ககுணத்தழகி மருமகள் தனலட்சுமியை ஆரத்தியெடுத்து தங்கவளையலை அணிவித்து தன்னுடன் வீட்டினுள் அழைத்து சென்றாள் மாமியார் மகாலட்சுமி...

புதிய உறவுகள், புதிய உலகம் பற்பல கனவுகளுடன் மாமியார் வீட்டினுள் சராசரி பெண்களை போலவே விளக்கை ஏற்றி வைத்தாள் தனலட்சுமி . தன்குலத்தை வாழையடி வாழையாய் தழைக்க செய்ய போகிறவளை பற்பல எதிர்பார்ப்புகளோடு ஏற்றுக்கொண்டாள் மாமியார் மகாலட்சுமி...

புதிய வீட்டினுள் வாழ்க்கை வேகமாக நகர்ந்தது , நாட்கள் வாரங்களானது , வாரங்கள் மாதங்களானது புதுப்பெண் பழையவள் ஆனாள் . புதிய மருமகள் வீட்டிலொருத்தியானாள்...

கனவுகளை மட்டுமே சுமந்து வந்த தனலட்சுமியின் கனவுகள் அத்தனையும் நிறைவேறிற்றா என்றால் ? நிச்சயமாக இல்லை! மாமியாரின் எதிர்பார்ப்புகள் அத்தனையும் நிறைவேறிற்றா என்றால் ? அதுவும் நிச்சயமாக இல்லை! ஆனால் மகிழ்ச்சியாக வாழ்க்கையை வாழ பழகியிருந்தார்களா ? என்றால் ஆம்! என்பதே அதன் மறுமொழி . அதற்கு காரணம் அவர்கள் அவர்களை புரிந்து கொண்டிருந்தார்கள் .

விட்டுக்கொடுக்க கற்றுக் கொண்டிருந்தார்கள்...

அவர்களுக்குள் பிரச்சனையே இல்லையா ? என்றால் பிரச்சனைகள் உண்டு! அதை சமாளிக்கும் வித்தையை கற்றிருந்தார்கள் அவர்கள் ... "பைபிளில் சொல்லப்பட்டிருக்கும் ரூத் , நெகோமி போல் " வாழ்ந்தார்களா? என்றால் இல்லை ! ஆனால் அவர்களுக்குள் ஓர் புரிதல் இருந்தது. அது அவர்களை பிரிதலின்றி வாழ வழிவகை செய்து கொடுத்தது...

இருவருக்குள்ளும் வரும் மனஸ்தாபங்களும் சச்சரவுகளும் "சூரியனை பார்த்ததும் மறைந்து போகும் பனி போல ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்ததும் மறைந்து போகும் " அத்துடன் அதை அவர்கள் மறந்து போவார்கள். அப்படியும் ஓரிரவை அவர்களிருவரும் பேசாமல் கழித்திருக்கிறார்கள் என்றால் அன்றைக்கு தன் தந்தையை மாமியார் மகாலட்சுமி குறைகூறிய அந்த ஒரு நாள் மட்டும் தான்...

எத்தனையோ கஷ்டங்கள் பட்டும், தன் சக்திக்கு மீறி கடன் வாங்கியுமே தான் தன் மகள் திருமணத்தை நடத்தியிருந்தார் தனலட்சுமியின் அப்பா . அப்படி மகள் திருமணத்திற்கு பார்த்து பார்த்து செய்தும் அதில் வந்த சிறு குறையொன்றிற்கு தன் தந்தையை குறைசொல்லியதை மட்டும் பொறுத்துக்கொள்ளவே முடியவில்லை தனலட்சுமியால். அன்றைக்கு ஒரு வார்த்தையும் பேசாமல் கலங்கிய கண்களுடனும் , வாடிய முகத்துடனும் அறைக்குள் சென்று தாளிட்டுகொண்டு சாப்பிட மறுத்து தூங்கிவிட்டாள் தனலட்சுமி. அச்சம்பவத்திற்கு பின் இன்று வரை அவர்கள் வீட்டில் யாரையும் குறை சொல்லியதே கிடையாது மகாலட்சுமி...

தனலட்சுமி சாப்பாடு கஷ்டமின்றி வளர்ந்தவள் . ஆனால் மகாலட்சுமி மரவள்ளி கிழங்கின்

வேரைக்கூட அவித்து உண்ணும்மளவு சாப்பாடு கஷ்டம் அனுபவித்து வளர்ந்தவள் . அதனால் சாப்பாடை வீணடிப்பதை அவளால் பொறுத்துக்கொள்ளவே முடியாது.

"சிறிது மீதமந்துவிட்டது என்றால்..."

"அரிசி சிறிது குறைத்து போட வேண்டியது தானே உணவை வீணடிப்பதை விட பசியுடனே படுத்துக்கொள்ளலாம் என்பாள் மகாலட்சுமி."

அப்படி குறைத்தே அரிசி போட்டும் மீதம் வந்துவிட்டால் மாமியாருக்கு தெரியாமல் மறைத்து வைத்துக்கொண்டு இரண்டு மூன்று நாட்களாக கொஞ்சம் கொஞ்சமாக பக்கத்து வீட்டு பார்வதி அக்கா மாட்டிற்கு ஊறைதண்ணி ஊற்றி வைக்கும் பாத்திரத்தில் போட்டு விடுவாள் தனலட்சுமி...

நாட்கள் நகர்ந்தது மழலைகள் பிறந்தது அவர்கள் குடும்பம் தழைத்தது . அவற்றிற்கு மருந்து கொடுப்பதிலும், உணவு கொடுப்பதிலும் மாமியாருக்கு பிடித்ததை அவருக்கு முன்னாலும் அவருக்கு பிடிக்காததை நல்லதென்று தான்படித்தறிந்தவற்றையும், தன் தோழியர் மூலம் அறிந்து கொண்டதையும் அவர் இல்லாத நேரமுமாக பார்த்து கொடுப்பாள் தனலட்சுமி...

இன்றைக்கு தனலட்சுமியின் மனம் மகிழ்ச்சியால் பொங்கி வழிகிறது. அதற்கு காரணமும் இருக்கிறது . தங்களது திருமண நாள் பரிசாக புதிதாய் கணவர் வாங்கியளித்த புது ஸ்கூட்டியை பார்த்ததில் தான் இத்தனை மகிழ்ச்சி அவளுக்கு. தன் கணவர், தன் தாய் முற்கொண்டு அத்தனை பேர் அவளை நோக்கி நிற்க அவள் அழைத்தது என்னமோ மாமியார் மகாலட்சுமியை தான் உள்ளுக்குள் மகிழ்ச்சி இருந்தாலும் தனலட்சுமியின் அம்மாவிடம் "முதலில்

நீங்கள் போங்கள் என்றாள் மகாலட்சுமி " எதார்த்தத்தை உணர்ந்து மகளுக்கு வாழ்க்கையை வாழ கற்றுக்கொடுத்திருந்த அந்த உன்னதத்தாயோ "நீங்களே போங்கள் அடுத்து நான் போகிறேன் என்றார்" தூசி விழாமலே கண்ணை துடைத்துக்கொண்டாள் மகிழ்ச்சியில் மகாலட்சுமி...

அதைகவனித்த மாணிக்கத்தின் கண்கள் உகுத்த கண்ணீரை துடைத்துக்கொண்ட அவனது இருவிரல்களும், அதை பார்த்துக்கொண்டிருந்த அந்த சிகப்பு நிற ஒற்றை ரோஜாவும், முல்லைக்கொடியின் மேல்வீற்றிருந்த அந்த இருமுல்லை மொட்டுகளுக்குமேயன்றி அங்கே நின்றிருந்த நாசியில் சுவாசமுள்ள வேறு யாருக்கும் தெரிந்திருக்க வாய்ப்பில்லை தான் அவன் கண்கள் கண்ணீர் சொரிந்ததென...

மாமியார் மருமகள் ஒற்றுமையில் அந்த மகனைத்தவிர இவ்வுலகில் வேறு யார்தான் அதிகம் மகிழ்ந்திருக்க கூடும்! அதிக மகிழ்ச்சியின் அடையாளம் ஆனந்த கண்ணீர் தானென்பதல்லவோ உலகத்தின் நியதி...

அன்பானவர்களுக்காகவும், நல்லவர்களுக்காகவும் காலக் கடிகாரம் மெதுவாக சுழல்வதில்லையே!

வேகமான காலஓட்டத்தில் ஊரார் பொறாமைபடுமளவு அவர்களது ஒற்றுமையும் வளர்ந்துகொண்டே சென்றது. கூட மகாலட்சுமியின் அனுமதியின்றியே முதுமையும் அவரை பிடித்துக்கொண்டது. திடீரென ஒரு நாள் மயக்கம் போட்டு விழுந்தாள் மகாலட்சுமி...

மருத்துவமனையில் சேர்த்தார்கள் . இதுவரையில் ஒற்றுமையாய் இருந்த மாமியார் மருமகளிருவரையும் மருத்துவமனையின் அவசரபிரிவு கண்ணாடிக் கதவு

பிரித்திருந்தது. கண்ணாடிக் கதவுக்கு உள்ளே மெசின்களின் உதவியோடு மூச்சுவிட்டுக்கொண்டிருந்தாள் மகாலட்சுமி . மூக்கு வழியாகயும், வாய் வழியாகயும் சுற்றி பிணைந்தபடி கிடந்தன ஓயர்கள் சில.

கையசைத்து அழைத்தாள் தனலட்சுமியை மகாலட்சுமி. கண்ணீரை துடைத்தபடி "உங்களுக்கு ஒன்றுமில்லையம்மா" என்றவளிடம்

ஆமாம்! எனக்கு ஒன்றுமில்லை தான்!

இனி நான் வாழ்க்கையில் காண ஒன்றுமில்லை தான்!

போதும்... எனக்கு இவ்வாழ்க்கையில் கிடைத்த மகிழ்ச்சிகள் அத்தனையும் போதும்!

"எனக்கு பேராசசை ஒன்று உண்டு தனலட்சுமி ! அடுத்த பிறவியிலும் நான் பெண்ணாக பிறப்பேனானால் நீயே எனக்கு மருமகளாக வர வேண்டும்" எனும் போது அவள் நா தழுதழுத்தது ... "நான் எதேனும் தவறு செய்திருந்தால் என்னை மன்னித்து வி..."

என சொல்ல வந்தவரின் வாயை தனலட்சுமி பொத்துவதற்குள் கண்கள் திறந்த நிலையில் தலை தனலட்சுமியின் மடியில் சரிந்தது...

மாமியாரின் கண்களை மூடிவிட்டு , தன் கண்களை கசக்கியபடியே வெளியே வந்தவளின் கண்களிலிருந்து வந்து விழும் கண்ணீர்த் துளிகள் வெறும் பிரிவின் வலியால் மட்டும் வந்து விழுகின்றன என்று யாரும் தவறாக எண்ணிவிட வேண்டாம்...

தான் வாழ்ந்த வாழ்க்கைக்கு அர்த்தமாய் அவ்வார்த்தைகள் போதும் தனலட்சுமிக்கு. இனி தான் வாழ போகும் வாழ்க்கைக்கும் தன் மாமியாருக்கு

*பதிலாய் துணையிருக்கும் அவ்வார்த்தைகள் . துன்பத்தில் ஆறுதலாய், வலிகளில் வழித்துணையாய் என்பது மட்டும் திண்ணமே...*

## 14. திராட்சை தோட்ட உவமையிலிருந்து ..

காலைலேயே வெல்டர் ஜோசப்புக்கும் சூப்பர்வைஸ்சர் டேவிட்க்கும் சண்டை . அவர் வந்து இது, இதெல்லாம் வெல்டிங் அடிக்கணும்னார் முகத்திலறைந்தாற் போல் "என்னால முடியாதுன்னுட்டான் ஜோசப் " காலைலேயே அத்தனை பேர் முன்னாடி இப்டி ஜோசப் சொன்னது பெரிய அவமானமா போச்சு டேவிட்க்கு . "இப்டி ஒவ்வொருத்தரா எதுத்து பேசினா சைட்டுக்குள்ள நமக்கு என்ன மரியாதை இருக்கும் " என மனதிற்குள் நொந்து கொண்டார் டேவிட்.

ஜோசப் அந்நேரம் அப்டி பேசுவான் என எதிர்பார்த்திருக்கவில்லை தான் அவர் . மேல மேனேஜர் கிட்ட புகார் ஒண்ணு போட்டு வைக்கலாமென்று பார்த்தா வெல்டிங் டெஸ்ட் பாஸ் ஆனவங்களா இருக்கிறது ரெண்டே பேர், ஆக மேல பேசியும் ஒண்ணும் ஆகபோறதில்ல மீறி போய் சொன்னாலும் "இருக்குற வேலைக்காரங்கள வெச்சு ஒழுங்கா வேல செய்ய முடியல ஸ்கூல் பசங்க போல எல்லாத்துக்கும் மூக்க சீந்திட்டு இங்க வந்திட்டான்னு" மேனேஜர் வேற வெந்த புண்ணுல வேல பாய்ச்சி தான் அனுப்புவான்.

"கம்பெனிக்கு சூப்பர்வைஸ்சர், வொர்க்கர் எல்லாம் முக்கியம் இல்ல வேல ஆகணும் அது தான் முக்கியம்." அதுக்கு அப்போ யார் தேவையோ அவன தட்டிக்கொடுப்பது தான் கம்பெனி ஸ்டைல் . அது பலவருசமா இந்த கம்பெனில குப்பகொட்டுற டேவிட்டுக்கு நல்லாவே தெரியும் . சைட்டுக்குள்ள போர்மேன், சூப்பர்வைஸருக்கு அடுத்து வெல்டர் தான், வெல்டர பழிவாங்கணும்னா சரியான நேரம்

பாத்ர்து அடிக்கணும் அது டேவிட்டுக்கு தெரியும் . பூனைய கொல்லணும்னா மூக்குல தானே அடிக்கணும் அதுபோல தான் வெல்டர்களும் நேரம் பார்த்து அடிக்கணும் கோபத்தை நெஞ்சில குத்தி வெச்சுகிட்டான் டேவிட் . வேலை குறையட்டும் , வாய்ப்பு வரும், அப்போ பாத்துக்கலாம்ன்னு.

இந்த சண்டைக்கு வெறும் ஜோசப்ப மட்டும் நாம குறை சொல்லிவிட முடியாது ! ஏன்னா இருக்குறது ரெண்டே வெல்டர் பாபுவும் , இவனும் இவன் கொஞ்சம் கோவக்காரன் தான் , ஆனாலும் வேலக்காரன். டேவிட் அவனுக்கு மட்டும் ஓவர் டைம்ல முப்பது மணிநேரம் அதிகமா எழுதி குடுத்தா... யாருக்கு தான் கோபம் வராது ? அந்த கோபத்த தான் இப்டி தீர்த்திட்டான் ஜோசப். அதோடு முடியவா செய்தது அவன் கோபம்...

அந்நேரம் பார்த்து ஆசையோட போன்ல பேச வந்தா அவன் மனைவி ஜென்சி இவனோ எடுத்த எடுப்பிலேயே "அறிவு கெட்டவளே! எப்போ போன் பண்றதுன்னு ஒரு வெவஸ்த வேண்டாம் ... வேலை நேரத்துலயா போன் பண்ணுவ வை டீ போண " என இருக்குற கோபத்துல கடுமையா பேசி வெச்சிட்டான். பாவம்! ஐஸ்கீரிமை கண்ட குழந்தையென ஆவலோடு பேசவந்த அவள் முகம் காற்று போன பலூன் போல சுருங்கி போயிற்று . அவள் கண்களின் ஓரம் கண்ணீர்த் துளிகள் துளிர்த்திருந்தது . "எனக்கென்னமோ அவன் கோபத்தின் வெப்பத்தில் அவன் மேல் அவள் வைத்திருக்கும் அன்பும், காதலும் தான் சிறிது சிறிதாக கண்களின் வழியே உருகி செல்கிறது என்றே தோன்றிற்று."

குடிக்கிறதுக்கு தண்ணிய தேடினான் அருகே தண்ணி இல்ல "டேய்! மடையா குமாரவேலு... வேல தொடங்குறதுக்குள்ள தண்ணிய கொண்டு வந்து

வைக்க தெரியாதாடா உனக்கு!'' என கத்தினான் ஜோசப். குமாரவேலுவுக்கு ஜோசப்பின் அப்பா வயதிருக்கும் அடுத்த மாதம் மகள் திருமணம் இல்லேன்னா இவன் வாயிலேருந்து இப்டியெல்லாம் கேக்குறதுக்கு பேசாம வேலைய விட்டுட்டு மொத பிளைட்டுக்கே ஊருக்கு போயிருப்பாரு குமாரவேல் அண்ணா.

வெளிநாடுகளில் ஏச்சும் பேச்சும் கேட்டுக்கொண்டும் பல்லைக்கடித்துக்கொண்டு பலரும் பொறுத்திருக்கும் காரணிகளில் குமாரவேல் அண்ணாவோட காரணம் அஃது. அன்றைக்கே மதியம் சாப்பாடு போடுற இடத்திற்கு சென்றான் ஜோசப். அங்க போட்ட சிக்கன் பீஸ் சின்னது அதுக்கு அங்கேயும் சண்டை ஆக அன்றைய தினத்த சண்டையாவே முடிச்சாச்சு ஜோசப். நிம்மதியற்ற மனதோடு றூம் வந்தடைந்தான்.

அப்போது தான் சர்ச் போகலாமா எனக்கேட்டான் பக்கத்து றூம் நண்பனொருத்தன் "நிம்மதியோட இருந்தா மனம் போன போக்குல போறதும், கஷ்டம் வரும்போ கடவுளை தேடுறதும் தானே மனித வழக்கம்" ஜோசப்பும் அதற்கு விதிவிலக்கல்ல இன்றைக்கு சர்ச் போக ஒத்துக்கொண்டான்.

பலமுறை கேட்டது தான் திராட்சை தோட்ட உவமை... இன்றைக்கும் செய்தி அதே தான் . ஆனால் இன்று புதியாய் தெரிந்தது அவனுக்கு இன்றைக்கு அது அவனுக்காகவே சொல்லப்படுவதாய் தோன்றிற்று...

தன் கணீர் குரலில் உவமையை விளக்கி சொல்ல துவங்கினார் சர்ச்சிலிருந்த பாஸ்டர்...

திராட்சை தோட்டத்திற்கு எஜமான் ஒருவன் இருந்தான். அவனுடைய தோட்டத்திற்கு வேலைக்கு ஆட்கள் தேவைப்பட்டது . கடைத்தெரு வந்தான்

அங்கு வேலையில்லாமல் சும்மா நிற்கும் சிலரை கண்டான். தன் தோட்டத்தில் வேலை செய்ய அழைத்தான். ஒரு பணம் கூலி பேசி அவர்களை வேலை செய்ய பணித்தான். மதியம் மறுபடியும் கடைத்தெரு போனான் எஜமான் . அப்போதும் வேலையின்றி சும்மா நிற்கும் சிலரை மீண்டும் வேலைக்கு அமர்த்தினான் அவர்களிடம் உங்களுக்கும் நியாயமான கூலியை தருவேன் என்றான். அவன் அந்தபடியே மதியத்திற்கு மேலும் மூன்று மணி அளவிலும் , நான்கு மணி அளவிலும் வேலைக்கு சிலரை அழைத்தான் அவர்களிடமும் உங்களுக்கு நியாயமான கூலியை தருவதாக சொல்லி வேலை செய்ய பணித்தான். மாலை மணி ஐந்தானது எல்லோரும் வேலையை முடித்து கூலி வாங்க சென்றார்கள்.

கூலியை கொடுக்க துவங்கினர் காலையில் வந்தவர்களிடம் பேசிய அந்த ஒரு பணம் கூலியை மாலை நான்கு மணிக்கு வந்தவன் வரை எல்லோருக்கும் சரிசமமாக கொடுத்தான் எஜமான் . உடனே காலையிலேயே வந்தவர்கள் முறுமுறுக்க துவங்கினார்கள். "நாள்பூரா கஷ்டப்பட்ட எங்களையும் இப்போது வந்தவர்களையும் சமமாக்கினீரே" என்று வருத்தத்தோடே கூறினார்கள். அதற்கு எஜமான் சொன்னார் "நண்பர்களே உங்களுக்கு நான் துரோகம் ஏதும் செய்யவில்லை உங்களுக்கு பேசின கூலியை கொடுத்துவிட்டேன் ... தோட்டம் என்னுடையது அதில் வேலைசெய்தவர்களுக்கு என் இஷ்டப்படி கூலி வழங்க எனக்கு உரிமை இல்லையா ? என்னுடைய நல்லமனதை பொறாமையோடு நீங்கள் பார்க்கலாமா? என்று கூறி அவர்களை அனுப்பி விட்டான். என்று கூறி முடித்தார் பாஸ்டர்.

அச்செய்தி ஜோசப் நெஞ்சை சுட்டது அது

அவனுக்காக... அவனுக்காக மட்டுமே சொன்னது போலிருந்தது. யோசிக்க துவங்கினான் இன்றைக்கு நாம் ஏன் சண்டை போட்டோம்? ஏன் மனநிம்மதியை இழந்து, எல்லார் நிம்மதியையும் கெடுத்து , எல்லோரிடமும் எரிந்து விழுந்தோம் ? சம்பளமும் ஓவர் டைம் காசும் ஒரு ருபாயும் குறைவின்றி கிடைத்தாகிற்று... இனி அதிகமா கிடைக்க வேண்டியது, அதை ஏன் நாம் எதிர்பார்க்க வேண்டும்? அதனால் தானே இத்தனை பிரச்சனை... படபடப்புகள் வேறு... நிம்மதியற்ற நிலை. பாபுவை நாம் ஏன் நம்முடன் ஒப்பிட வேண்டும்? கம்பெனி காசு அதை டேவிட் அவனுக்கு கொடுத்திருக்கிறார் அதில் நாம் பொறாமை பட என்ன இருக்கிறது ? என எண்ணிக்கொண்டு வெளிவந்தவன் முகத்தில் ஒரு தெளிவு தெரிந்தது.

மாதம் ஒன்று உருண்டோடியிருந்தது . இன்றைக்கு அடுத்த சம்பள தினம் ஜோசப்பை கடந்து சென்ற டேவிட்டிடம் என்னை எதிர்த்து பேசிய உன்னை பழிவாங்கிவிட்டேன் என்பது போல் ஒரு ஏளன பார்வையும், முகத்திலொரு வெற்றி செருக்கும் தெரிந்தது. அதை கண்டுகொள்ளவேயில்லை ஜோசப். பாபு முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது. பாபுவின் சம்பளக்கவரை பாறகவோ , உனக்கு சம்பளம் எத்தனை வந்தது ? என கேட்க வேண்டும் எனும் எண்ணமும் வரவேயில்லை ஜோசப்புக்கு . ஜோசப் தன் சம்பள கவரை பிரித்து பார்த்தான் சம்பளமும் , ஓவர்டைமும் சரியாக இருந்தது இறைவனுக்கு நன்றி கூறினான்.

வேலையை துவங்க சென்றவன் போண் சிணுங்கியது எடுத்து பார்த்தான் அழைப்பது மனைவி...

"என்ன என்றான்..?"

"வேலை நேரத்துல போன் பண்ணிட்டேன்

சோறின்னா.."

"பரவாயில்ல சொல்லு என்றான்"

"நம்ம ரதி குட்டி போட்டுருக்குங்க... அத்தனை அழகு, உடலெல்லாம் வெள்ளை நிறம், நெற்றியில் மட்டும் பொட்டு போல ஒரு கறுப்பு என மகிழ்ச்சி பொங்க கூறினாள்... தன் வீட்டு ஆடு குட்டி போட்டதை"

"ஆணா..? பெண்ணா..? என கேட்டான்..."

"பெண் என்றாள்"

"மாளுன்னு பேர் வை... கறுப்பு பொட்டு உனக்கு கூட ரொம்ப அழகு என்றான்"

"கன்னத்தில் குழியொன்றுவிழ வெட்கத்தாலும், மகிழ்ச்சியாலும் மலர்ந்தது அவள் முகம்..."

"சரி... எனக்கு வேலை இருக்கு அப்றம் பேசுகிறேன் என்று கூறி அழைப்பை துண்டித்தான்"

"மகிழ்ச்சியில் ரெக்கை இன்றியே வீட்டிற்குள் பறந்தாள் அவள்... கண்ணாடி முன் சென்று கறுப்பு பொட்டொன்றை வைத்தவாறு ம்மே ... ம்மே... என்றழைத்த ஆட்டுக் குட்டியை "இந்தா வந்துட்டேன் மாளு" என்று கூறிக்கொண்டே விரைந்தாள் அதனிடமாய்."

"குடிக்க தண்ணி தேடினான் ஜோசப்"

"தம்பி... எடுக்க மறந்திட்டேன் இதோ எடுத்து வருகிறேன் என்றார் குமாரவேல் அண்ணா பவ்யமாய்"

"இல்ல பரவாயில்லண்ணா... நானே எடுத்துட்டு வருகிறேன் என்று கூறி பாட்டிலை வாங்கிச்சென்றான் ஜோசப்"

"மதிய உணவு இவனை பார்த்ததும் சப்ளையர்

சொல்லிவிட்டான் ஜோசப் அண்ணா இன்னைக்கு பீஸ் கொஞ்சம் சின்னது தான் வேணும்னா ஒண்ணு கூட தாறேன் வாங்கிட்டு சண்டை போடாம போங்க என்றான்"

"அவனுக்கு புன்முறுவலொன்றை பரிசளித்து ... பரவாயில்ல எல்லாருக்கும் குடுக்குறதை போல குடு போதும் என்றான்."

ஜோசப் வாழ்வை நாசமாக்கும் பொறாமையை வெளியேற்றும் மந்திரத்தை வசனத்திலிருந்து கற்றுக்கொண்டான். அதை வாழ்வில் பின்பற்ற துவங்கினான். இனி அவனை பொறாமை அண்டாது . மகிழ்ச்சி அவனை விட்டகலாது . பொறாமை எனும் இருட்டு வெளியேற அமைதி எனும் வெளிச்சம் அங்கு தங்குவது இயல்பு தானே...

## 15. அடிமைகள் அவலவாழ்வு

மரத்திற்கு பின்னாலிருந்து எட்டி பார்க்கும் சிறு குழந்தை போல முட்புதர்களும், செடி, கொடிகளும் மறைத்து கிடக்க அதன் உள்ளிருந்து எட்டி பார்த்துக்கொண்டிருக்கிறது பாழடைந்து கிடக்கும் எங்கள் ஊரின் பழங்காலத்து மண்டபம் . நடுநிசி வேளையில் அவ்வழியே தான் இதோ, நடந்து போய் கொண்டிருக்கிறேன் பள்ளி கல்வியை கூட இன்னும் முடித்திராத நான்...

அம்மண்டபத்தை பற்றி பலரும் பல திகிலூட்டும் கதைகளை சொல்லி கேட்டிருப்பதால் பயந்து பயந்தே போய்கொண்டிருக்கிறேன் அவ்வழியினூடே....

நானே எதிர்பார்த்திராத வண்ணம் என் பயத்தை பன்மடங்கு அதிகரிக்கும் வண்ணம் அம்மண்டபத்திலிருந்து குலுங்கி குலுங்கி அழும் ஒரு சிறு பெண்ணின் குரல் ஒன்று காற்றில் கலந்து வந்து எனை வழிமறிக்கிறது . சுற்றும் முற்றும் திரும்பி பார்த்தேன் யாருமில்லை அங்கே . பயமும் பதட்டத்துடனும் வானளாவி உயர்ந்து நிற்கும் எங்கள் ஊரின் கடைசி பனைமரத்தின் மூட்டில் மறைந்து நின்று கொண்டு காதுகளை கூர்மையாக்கி சத்தம் வந்த மண்டப திசையை கூர்ந்து கவனிக்க துவங்கினேன்...

சற்று நேரத்திற்கெல்லாம் சத்தம் இன்னும் சத்தமாக கேட்கிறதெனக்கு. இப்போது அச்சிறுப்பெண் பேசுவதும் கேட்கிறதெனக்கு. அவளுடன் இன்னும் இருவர் அங்கு அவளுடன் இருக்கிறார்கள்.

அவர்கள் இருவரும் விசும்பி விசும்பி அழும் சத்தம் மட்டும் காற்றில் கலந்து வருகிறது என்னிடம்

அவள் கெஞ்சுகிறாள் அவர்களிடம் "அப்பா என்னை அவங்க கூட அனுப்பாதீங்க! எனக்கு பயமா இருக்கு! அம்மா நீங்களாச்சும் சொல்லுங்கம்மா என்னை அவங்க கூட அனுப்ப வேண்டாமுன்னு சொல்லுங்கம்மா!... என அவள் அழுதுகொண்டே கெஞ்ச கெஞ்ச... அதற்கு பதிலில்லை அவர்களிடம் . ஆனால் பதிலுக்கு மாறாக அவர்களது விசும்பல் சத்தம் மட்டும் இன்னும் இன்னும் அதிகமாகிறது . ஆனால் அப்போதும் அச்சிறுமிக்கு ஆறுதலாய் ஒரு வார்த்தையுமில்லை அவர்களிடம்...

அந்நேரம் கோடையிடி சத்தம் போல காதுகளை பிளக்கும் பேரிடி சத்தம் ஒன்று ஒரு மனிதனின் வாயினின்று புறப்பட்டு வந்தது அவன் "ஏய்! அடிமை நாயே அழுகையை நிப்பாட்டு ... ச்சீ! அழுகையை நிப்பாட்டு... அழு மூஞ்சியை பலி கொடுத்தா ஆத்தா மனசு குளிராது . நீ மொரண்டு பிடிச்ச உன் கண் முன்னாடியே உன் அப்பன் , ஆத்தா, தம்பி, தங்கை எல்லாத்தையும் வெட்டி போட்டுடுவேன் . எலேய்! எரும மாடு போல பார்த்துட்டு நிக்காம சொல்லி வை மவளுக்கு" என அதிகாரத்தோடு அதட்டிய பிறகு சில நொடிகள் அங்கு நிசப்தம் நிலவியது...

பட்டப்பகலில் நடு உச்சி வேளையில் ஒற்றை பனையின் பின்னால் மறைந்து நின்றுகொண்டு இதை கேட்டு கொண்டிருக்கும் என் கால்கள் ரெண்டும் கதகளி ஆடுகிறது . பற்கள் அத்தனையும் பரத நாட்டியம் ஆடுகிறது . கைகள் ரெண்டும் தபேலா வாசிக்க, யாராச்சும் உதவிக்கு வருகிறார்களா என்று சுற்றும் முற்றும் திரும்பி பார்த்தா...

தூரத்துல நாய் ஒன்று முழு தேங்காய் ஒன்றுடன் மல்லுக்கட்டிக் கொண்டிருக்கிறது அதை திங்க . இந்த பக்கத்துல ஒரு கூட்டம் ஆடுகள் புதுசா புற்களை பார்ப்பது போல அப்படி ஆக்ரோசமாக மேய்ந்து

*கொண்டிருக்கிறது. என் நெலம தெரியாம பக்கத்து புளியம் மரத்துல புறாக்கள் ரெண்டு தங்கள் காதலை வளர்த்து கொண்டிருக்கு...*

*தூரத்தில் கேட்கும் பெருமழை இரைச்சல் போல மீண்டும் அங்கிருந்து ஒலிக்கிறது சத்தம் . இம்முறை பூஜை செய்யும் மந்திரவாதியின் குரல் கேட்கிறதெனக்கு. ஏதேதோ மந்திரம் சொல்லிக்கொண்டிருந்த அவன் திடீரென காட்டு கத்து கத்துகிறான் "பலிய கொண்டுவாடா !... பலிய கொண்டு வாடா!..." என அவன் கரடி போல் அப்படி கத்திய சில நொடிகளுக்குள் அங்கு இரண்டு மூன்று பேர் நடக்கும் சத்தம் கேட்கிறது. அவர்களுடன் போக மறுக்கும் அச்சிறுமியை வலுகட்டாயமாய் அழைத்து செல்கிறார்கள் அவர்கள்...*

*அவள், "அப்பா என்னை காப்பாத்துங்க !... அம்மா என்னை காப்பாத்துங்க !... என்னை கொண்டு போக வேண்டாமுன்னு சொல்லுங்க!... என கத்தி கதற பதில் வார்த்தைகள் இல்லை அவர்களிடம் . அவர்களிடம் அவளுக்காய் இயலாமையின் உச்சமாய் மிச்சமாய் ஒரு 'விசும்மல்' மட்டுமே மிச்சமிருக்கிறது ! தடபுடலாய் புசாரி மந்திரங்கள் ஓத சிறுமியை இருவர் பிடித்து வைத்திருக்க. ஒருவன் ஓங்கி ஒரே வெட்டு "அம்மா" என்ற அலறலுடன் அச்சிறுமியின் தலை தனி உடல் தனியாய் போனதுடன் அவள் உயிர் பிரிந்தது . பலி திருப்தியாய் கொடுத்த மகிழ்ச்சியில் ஒரு அணியினர் ஆனந்தத்தில் ஆர்பரிக்க அவள் பெற்றோரின் அழுகையும் அவர்கள் விசும்பல் சத்தம் மட்டும் வந்து மோதிக்கொண்டிருந்தது என் காதுகளில் . மெல்ல மெல்ல அச்சத்தம் குறைந்து முழுதுமாய் காற்றில் கலந்து போயிற்று அச்சத்தம்...*

*அவ் விசும்பலில் ஒரு அடிமையின் வலி தெரிந்து!*

*அவ் விசும்பலில் ஒரு அடிமையின் வேதனை*

தெரிந்தது!

அவ் விசும்பலில் ஒரு அடிமையின் விரக்தி தெரிந்தது!

அவ் விசும்பலில் ஒரு அடிமையின் கோபம் தெரிந்தது!

அவ் விசும்பலில் ஒரு அடிமைக்கு இப்பிறப்பின் மீதிருந்த வெறுப்பு தெரிந்தது!

அவ் விசும்பலில் ஒரு அடிமைக்கு இனி அடிமையாய் பிறப்பே வேண்டாம் என்ற பிராத்தனை தெரிந்தது!

இச்சத்தத்தை கேட்டதில் பயமும் பட படப்பும் ஒருவித வேதனையும் எனை சூழ்ந்து கொள்ள வீட்டில் சென்று படுத்து கொண்டேன் எனை பிடித்து கொண்டது காய்ச்சல் . பயந்தால் கூட காய்ச்சல் வருமென்பது என் வாழ்விலும் அன்றைக்கு உண்மையானது...

பயமும் காய்ச்சலும் பிடித்துக்கொண்டாலும் அந்த பாழடைந்த மண்டபத்தை குறித்து அறியும் ஆவல் என்னில் அதிகரித்தது . எனக்கு கதை சொல்ல வேண்டியே பிறப்பெடுத்து வந்ததாக நான் கருதும் ஒரு ஜீவன் தான் என்னுடைய பாட்டி. இதோ, கையில் மருந்துடன் என்னிடம் தான் வருகிறாள்.

“பாட்டி அந்த மண்டபத்தை குறித்து பலரும் பலவாறா கதை சொல்றாங்களே அதை பற்றி எனக்கு சொல்லு பாட்டி...”

“டேய்! மொத உனக்கு உடம்பு சரியாகட்டும் அப்றம் சொல்றேன்டா நான்”

“இல்ல... இல்ல... முடியாது பாட்டி ... எனக்கு நீ இப்பவே சொல்லித்தரணும்” என அடம் பிடிக்க துவங்கினேன் நான்.

“சொன்னா கேளு அதை கேட்டா நீ பயப்படுவ

இப்போ மருந்தை குடிச்சிட்டு படுத்து தூங்கு அப்றம் சொல்லிதர்றேன் டா.'' என்றாள் பாட்டி.

பாட்டி சொல்லி தர மறுக்க மறுக்க அக்கதையை அறியும் ஆவல் என்னில் அதிகரித்து கொண்டேபோனது. பாட்டியிடமிருந்து கதையை வர வைக்க எனக்கு ஒரு ஐடியா தோன்றியது உடனே அதை பாட்டியிடம் முயற்சித்தேன் . அது பலிக்கவும் செய்தது... ''பாட்டி நீ அந்த கதையை சொல்லலேன்னா நான் மருந்த குடிக்க மாட்டேன்'' என்றேன் கோபமாக முகத்தை வைத்துக்கொண்டே.

பாட்டிக்கு என் பிடிவாத குணம் தெரியும் . கதை சொல்லித்தர ஒத்துக்கொண்டாள். மருந்தை கொடுத்தாள். எனை தன் மடியில் படுக்க வைத்துவிட்டு என் தலை முடியை வருடிக்கொண்டே, என் தோள்களை தட்டி கொடுத்தவாறே கதை சொல்ல துவங்கினாள்...

''சில நூற்றாண்டுகளுக்கு முன் நம்ம மாவட்டம் (கன்னியாகுமரி) இரணியல் பக்கம் ஒரு பெரிய அடிமை சந்தை ஒன்று இருந்ததாம் . இங்கிருந்து தான் அடிமைகளை வாங்கி செல்வது வழக்கமாம் . இன்றைய காலத்தில் ஆடு , மாடு, எருது போன்றவற்றை விலை கொடுத்து வாங்கி நம்முடைய தேவைக்கு பயன்படுத்தி கொள்வதை போல அப்போதெல்லாம் மனிதர்களை வாங்கி விற்கும் வழக்கம் இருந்ததாம் . அப்படி வாங்கி வரும் அடிமைகளை வேலைக்கு வைப்பது மட்டுமின்றி தேவையெனில் அவர்களை பலி கொடுப்பதும் உண்டாம்.

அப்படி மனித உயிர்களை பலி கொடுக்க பயன்படுத்தப்பட்ட மண்டபம் தான் அம்மண்டபம் . காலபோக்கில் அடிமைமுறை ஒழிய பல உயிர்களை பலிகொண்ட மண்டபம் இப்படி பாழடைந்து

*பரிதாபமாய் கிடக்கிறது என்று அம்மண்டபத்தின் வரலாற்றை சொன்னாள் பாட்டி...*

*எனக்கு புரிந்தது அத்தனையும் புரிந்தது . அம்மண்டப பகுதியில் பேய் பிசாசுகள் உண்டு அங்கு நடுபகலிலும் இரவிலும் போகக்கூடாது என்பதன் காரணம் புரிந்தது. நான் அங்கிருந்து கேட்ட அச்சத்தத்தின் காரணமும் புரிந்தது. ஆனால் அங்கு நான் கேட்ட அச்சத்தத்தை பற்றி பாட்டியிடம் மூச்சும் விடவில்லை . அங்கு ஏன் போனாய் என்று எனக்கே வசவு விழும் ஆகவே சொல்லவில்லை; இனியும் சொல்ல போவதும் இல்லை...*

*(கதை கற்பனை தான்)*

*ஆனால் கன்னியாகுமரி மாவட்டம் இரணியலில் அடிமை சந்தை ஒன்று இருந்ததாக "மறுபக்கம்" நாவலாசிரியர் "பொன்னீலன்" அவர்கள் அந்நாவலில் சில வரலாற்று மேற்கோள்களுடன் குறிப்பிட்டுள்ளார்...*

*இந்திய வரலாற்றில் குறிப்பிடும் படியான இரண்டு அடிமைகள் "குதிப்மினாரை" கட்டிய "குப்புதீன் ஐபக்" குதுப்மினாரை 1193 ல் கட்ட துவங்கி பின் இவர் மருமகன் ஆட்சி காலத்தில் கட்டி முடிக்க பட்டது...*

*மற்றொருவர் "மாலிக் கபூர் " இவர் தான் 1309 ம் ஆண்டு வாராங்கல் நாட்டு மன்னன் பிரதாப ருத்ர தேவனிடமிருந்து உலக புகழ் பெற்ற "கோகினூர் வைரத்தை" கைபற்றியவர்.. இது தான்பின்னாளில் 1877 ம் ஆண்டில் "விக்டோரியா மகாராணியின் மணிமகுடத்தில் பதிக்க பட்டது...*

*இவர்கள் இருவரும் அடிமையாய் விற்கப்பட்டு பின்னாளில் அரசர்களாக உயர்ந்து தங்களுக்கென தனியாய் பெயரையும் புகழையும் சம்பாதித்து இந்திய வரலாற்றில் நீங்கா இடம் பிடித்து கொண்டனர்...*

## 16. பந்த்தொன்றும் தொடரும் அதன் வலிகளும்...

*காலை வேளை கண்ணனின் மனைவி ரஞ்சினி காலில் சக்கரம் கட்டியவளை போல சுழன்று வந்து கொண்டிருந்தாள். மகன் ஜாமெக்ட்றி பாக்ஸை காணோம் என்கிறான். மகள் கையில் ரிப்பனோடு பள்ளிக்கு நேரமாகுது தலை கட்டு விடு என்கிறாள் . அடுப்பில் இருந்த தோசை ஒன்று கருகும் வாசத்தை வீசி திருப்பி போட அழைக்கிறது அவளை . இதற்கிடையில் கூவுகிறது குக்கர் ஒன்று . இந்த இல்லத்தரசிகளுக்கு மட்டும் காலை வேளையில் நாலு கையும் நாலு காலும் இருந்தாலும் பத்தாது தான் போல.*

*எத்தனை முறை சொன்னாலும் ஒரு நாள் முன்னமே பள்ளி கொண்டு செல்லும் பேகை எடுத்து வைக்க மாட்டான் என மகனை வாசைபாடிக்கொண்டு அவன் ஜாமிக்ரி பாக்ஸ்சை எடுத்து கொடுத்து , அப்படியே தோசையையும், கூவிய குக்கரையும், கவனித்து விட்டு இந்த பக்கம் கையில் ரிப்பனோடு நிற்கும் மகளிடம் 'தன் வயதை அறிவிக்கும் வயதானவளுக்கு ' ஒரு ரிப்பன கூட நான் தான் கட்டிவிடணும் என அவள் குமட்டுலே ஒரு குத்து விட்டுவிட்டு வேக வேகமாக ரெட்டை ஜடை பின்னி அவளுக்கு கண்மை போட்டு அழகாய் பொட்டொண்ணு வைத்து விட்டு அவள் முகத்தை சிறிது தலையை தூரத்தில் நீங்கி பார்த்து அந்த அவசரத்திலும் கோணலாய் இருந்த பொட்டை சரி செய்தே செல்கிறாள் ரஞ்சினி...*

"மகள்களை பெற்ற அம்மாக்களுக்கு மட்டும் தான் தெரியும் மகளை அழகு படுத்தி பார்ப்பதில் தான் எத்தனை ஆனந்தமென்று."

இத்தனை களேபரத்தின் மத்தியிலும் கண்ணனின் கோபக் குரல் கேட்கிறது "எத்தனை நேரமா காத்திருக்கேன் ரஞ்சினி எப்போ தான் என்னைய வேலைக்கு அனுப்பி வைக்க போற?"

உள்ளுக்குள்ளிருந்து சாந்தமாய் "இதோ , வந்துட்டேங்க" எனும் சத்தம் மட்டும் வந்தது ரஞ்சினியிடமிருந்து.

இத்தனை அவசரத்தின் நடுவிலும் அவளை புரிந்து கொள்ளாமல் மீண்டும் மீண்டும் அவளை அவசரபடுத்துகிறானேயென யாரும் கண்ணனை தவறாக எண்ணி விட வேண்டாம் . அவன் நிலைமையில் யார் இருந்திருந்தாலும் அப்படி தான் செய்திருப்பார்கள்...

தன் இருபது வருட கனவு . தனது இத்துனை நாள் மொத்த சம்பாத்தியம். தனது வாழ்நாள் லட்சியம் . அத்தனையும் நேற்றைக்கு தான் நிறைவேறி இருந்தது. ஆம்! சொந்த கடை வைக்க வேண்டும் என்ற அவனது ஆவல், நோக்கம், விருப்பம், வேகம், வெறி அத்தனையும் நேற்றைக்கு தான் நிறைவேறி இருந்தது. அப்படிபட்ட சூழ்நிலையில் அவன் முதலாளியாய் கடைக்கு போக அவசரபடுவதில் தவறில்லை தானே? கடை திறப்பு விழாவிற்கு வந்திருந்த தனது பழைய முதலாளியும் சொன்னார்...

கண்ணா! நீ ஓடி ஓடி உழைத்தாய்,

ஓய்வின்றி உழைத்தாய்,

உண்மையாய் உழைத்தாய்

அதன் பலனை இனி அனுபவிக்க போகிறாய் இனி

உன் வாழ்வில் ஏற்றம் மட்டுமே என வாயர வாழ்த்தி விட்டு சென்றார்.

மறுபடியும் அவன் ரஞ்சினியை அழைக்கும் வாய்ப்பை அவள் அவனுக்கு வழங்கவில்லை . உணவும் மற்றெல்லாம் தயராக கொண்டு வந்து கொடுத்தாள். தனது முகத்தில் பூத்திருந்த வியர்வை துளிகளை முந்தானையில் துடைத்து முந்தானையை பின்னால் தூக்கி போட்டு விட்டு கலைந்திருந்த தலைமுடியையும் புடவையையும் சரிசெய்து கொண்டு புன்னகையோடு வீதி வரை வந்து அவனை வழி அனுப்பி வந்தாள்...

மகிழ்ச்சியோடே கடையை திறந்தான் கண்ணன் . வழக்கம் போலவே பரபரப்பாகவே இயங்கி கொண்டிருந்தது அக்கடை வீதி . யாரும் எதிர்ப்பார்த்திராத நேரத்தில் தூரத்தில் ஒருவன் ஓட்டமும் நடையுமாக கத்திச் சொல்லிக்கொண்டே செல்கிறான்!

''யாரோ அரசியல்வாதியை கொன்னுட்டாங்களாம் அதனால அவனோட கட்சிக்காறங்க அறிவிக்கபடாத பந்த் அமல்படுத்துறாங்க , கண்ணுல படுற கடைகளையெல்லாம் அடிச்சு நொறுக்குறாங்க கடையை மூடிடுங்க'' என அவன் சொல்லி முடிப்பதற்குள் வெட்டுக்கிளி கூட்டம் போல் வந்து சேர்ந்தது அக்கலக கூட்டம்...

வந்ததும் வராததுமாக கடைகளை சின்னாபின்னமாக அடித்து நொறுக்க துவங்கினர்.

கண்ணனின் கனவு கடையும் தப்பவில்லை அவர்கள் பார்வையிலிருந்து.

கண்ணன் கதறினான் அவர்கள் காதுகளில் விழவேயில்லை..

கண்ணன் கண்ணீர் விட்டு அழுதான் அவனது கண்ணீர்

அவர்கள் கண்களில் படவேயில்லை.

என் இருபது வருட உழைப்பு என்றான்

அதை கேட்க அங்கு ஒருநாதியும் இல்லை...

“இங்க ஒருத்தன் செத்து கெடக்கான் கடைய வெச்சு காசு பாக்கணுமோ உனக்கு” என்று எட்டி முகத்து மேலேயே மிதித்தான் அருவா மீசை வைத்த அயோக்கியன் ஒருவன்.

திறமையான சிலர் கையில் கிடைத்ததை அள்ளி கொண்டு ஓடிக்கொண்டிருந்தனர்.

என் மனைவியின் தாலிக்கொடியை கூட அடகு வைத்து வாங்கிய பொருட்கள் என்றான் வாயிலே மிதித்தான் இன்னொருவன்.

அவன் கண்முன்னே அவன் கடை சூரையாடப்பட்டது.

அதிலும் வெறி அடங்கா அக்கும்பல் அவன் காலை பிடித்து தரதரவென இழுத்து வந்து நடுரோட்டில் போட்டு விட்டு அவன் கடையை அவன் கண்ணெதிரிலே தீக்கிரையாக்கி விட்டு சென்றது...

வருடங்கள் பல கடந்தும் , இவை அத்தனையும் நேற்று நடந்தது போல் இருந்தது கண்ணனுக்கு . மற்றொரு கட்சிக்காரனின் பந்த் காரணமாக வீட்டில் அமர்ந்து பந்த்காரணமாக நிகழ்ந்த அழிவை, கலைந்த பலரின் கனவை தொலைகாட்சியினூடே செய்தியாக பார்த்துக் கொண்டிருக்கிறார் கண்ணன் தன் குடும்பத்தினருடன்.

அன்றைய கலவரத்துக்கு பின் கடையின் நஷ்டத்தை ஈடுகட்ட சொந்த வீட்டை இழந்தான் . நல்ல மதிப்பெண்ணுடன் மகள் பனிரெண்டாம் வகுப்பு வெற்றி பெற்றும் மேற்படிப்புக்கனுப்ப காசில்லாமல் வேலைக்கு அனுப்ப வேண்டிய கட்டாயத்திற்கு

தள்ளபட்டான். அத்தனையும் தன் மனத்திரையில் ஓட தொலைகாட்சி செய்தியை பார்த்துக்கொண்டிருந்தவனுக்கு டீ ஒன்றை போட்டு கொண்டு வந்து கொடுத்த ரஞ்சினியோ வார்த்தைகள் மௌனித்து நிற்க பெருமூச்சோடு அவர்கள் கண்கள் மட்டும் அவர்கள் வலிகளை பேசிக்கொண்டது.

தொலைக்காட்சியில் செய்தி போய்க்கொண்டிருந்தது.

தன் கட்சிக்காரரர்கள் செய்தது தவறென சொல்லிக்கொண்டிருந்தார் அக்கட்சி தலைவர் . எதிர்க்கட்சியினரோ நஷ்டமடைந்தவர்களுக்கு அரசு நஷ்டஈடு வழங்க வேண்டுமென வலியுறுத்தி கொண்டிருந்தனர். இதை பார்த்துக்கொண்டிருந்த கண்ணனோ பொருள் பொதிந்த ஏளன புன்னகை ஒன்றை உதிர்த்தவனாய் தொலைக்காட்சி பெட்டியை அணைத்து விட்டு வெளியில் மனைவி மக்களுடன் நிலாக்காய சென்றான்.

வானில் உதித்திருந்தது விடிவெள்ளி.

அவர்கள் அத்தனை பேர் கண்களும் ஒருசேர குவிந்திருந்தது அவ்விடிவெள்ளியில் தங்கள் வாழ்வு எப்போது விடிய போகிறதோ என்ற ஏக்கத்தோடு...

## 17. காந்திராமின் சுதந்திர தாகமும், பொன்னம்மாவின் காதலும்...

ஆங்கிலேயரின் அடக்கு முறைகளுக்கு எதிராக மகாத்மா காந்தியடிகள் உண்ணாவிரத போராட்டத்தை அறிவித்தார் . எனும் பத்திரிக்கை செய்தியை "மார்த்தாண்டம் நண்பர்கள் வாயன சாலை" எனும் பெயரில் இயங்கி வரும் நூலக கட்டிடத்தில் காங்கிரஸ் பேரியக்கத்தின் தொண்டன் காந்திராம் வாசித்துக் கொண்டிருந்தான் . மகாத்மா காந்திஜியின் மீது கொண்ட அதீத அன்பால் அவர் பெயரை முன்னால் சேர்த்துக்கொண்ட லட்சோப லட்சங்களில் ராமும் ஒருத்தன்...

உறுப்பினர்கள் அத்தனைபேரும் ஒன்று கூடினர் நாம் எவ்வழியில் மகாத்மாவுக்கு ஆதரவாக போராடுவது என யோசித்து நாளை காலை முன்னறிவிப்பு எதுவுமின்றி போலீஸ் நடமாட்டம் குறைவாக இருக்கும் மார்த்தாண்டம் வெட்டுமணி சந்திப்பில் ஆர்ப்பாட்டம் ஒன்றை நடத்துவது என்று தீர்மானித்து வெளியில் கேட்டுவிடாதவாறு "வந்தே மாதரம் " "மாகாத்மா காந்திக்கு ஜே " போன்ற கோஷங்களை எழுப்பி கலைந்து சென்றனர்...

தன் வீட்டை நோக்கி நடக்க துவங்கிய காந்திராமின் மனதில் அலையலையாய் எண்ணங்கள் வந்து மோத துவங்கியது. நாளை முதன் முதலாக நாட்டிற்காக போராட்டம் ஒன்றிற்கு போக போகிறோம் . போராட்டத்திற்கு எதிர்ப்பு சொல்லியிருக்கும் வெள்ளையர்கள் நிச்சயம் நம்மை கைது செய்து சிறையிலடைப்பார்கள். நாளை நாம் முதன் முதலாக நாட்டிற்காய் சிறை செல்ல போகிறோம் என்ற

எண்ணம் உள்ளத்தில் எழும் வேளையிலேயே உடலெல்லாம் புல்லரித்தது அவனுக்கு . நாட்டிற்காக சிறை செல்ல போகிறோம் என்ற எண்ணம் தான் அவனுக்கு எத்தனை மகிழ்ச்சி , எத்தனை பூரிப்பை தந்தது...

நாளை போராட்டத்தின் போது நாம் என்ன செய்ய வேண்டும். எப்படி நடந்து கொள்ள வேண்டுமென எண்ண துவங்கினான் காந்திராம் . என்ன தான் கொடுமைகளுக்கு ஆளானாலும் பின்வாங்க கூடாது . முதல் ஆளாய் நாம் தான் கைதாக வேண்டும் என தீர்மானித்துக் கொண்டான் மனதில் வைராக்கியத்தோடு...

நாளை நாம் நடத்தும் இப்போராட்டம் நம்மூர் பத்திரிக்கையின் ஒரு ஓரத்திலாவது வருமா ? இந்தியாவின் கடைகோடி கன்னியாகுமரி மண்ணில் நடக்கும் இப்போராட்டம் மகாத்மாவின் காதுகளில் எட்டுமா? அவர் என்ன எண்ணிக் கொள்வார்? நம்மை நினைத்து பார்ப்பாரா ? நாட்டின் கடைகோடியிலும் நாட்டிற்காய் உயிரையும் கொடுக்க துணிந்திருக்கும் போராட்ட வீரர்களை குறித்து எண்ணி பெருமைபடுவாரா?

இப்படிப்பட்ட எண்ணங்கள் மனதில் ஒருபுறம் எழுகையிலேயே மற்றொருபுறம்

என்னவொரு முட்டாள் தனமான யோசனை . பத்திரிக்கையில் செய்தி வருவதா முக்கியம் நாட்டின் விடுதலையல்லவா நமக்கு வேண்டும் . காந்தியின் கரங்களை வலுப்படுத்துவது அல்லவா நமது கடமை . எத்தனை பெரிய பேராசை நமக்கு.

முப்பது கோடி பேரின் தலைவன் . காங்கிரஸ் எனும் பேரியக்கத்தின் வழிகாட்டி . இந்த முப்பது கோடி பேரையும் சுதந்திரம் எனும் ஒற்றைபுள்ளியில்

கொண்டுவந்து நிறுத்திய மகான் அவர் . மகாத்மா அவர். நம்மை எண்ணுவார் ! என யோசிப்பதே எத்தனை பெரிய முட்டாள்தனமல்லவா...

பத்திரிக்கை ஆசிரியர் அவர். அவருக்கு தான் எத்தனை எத்தனை பணிகள் . தேசத்திற்கு மாகாத்மா அவர் , சிலருக்கு மகான் . சிலருக்கு பரமாத்மா . இன்னும் சிலருக்கு இந்தியாவை ஆங்கிலேயரின் அடிமைத்தனத்திலிருந்து விடுவிக்க வந்த அவதாரம். அவர் நம்மை போன்ற சாதாரணமானவனை எல்லாம் எண்ணிக்கொள்ள நேரம் எங்கே ? எத்தனை பெரிய பைத்தியக்கார தன எண்ணம் என யோசித்துக்கொண்டே வந்து சேர்ந்திருந்தான் வீட்டின் அருகாமையில்...

வீட்டில் செல்ல எத்தனித்தவனை அழைத்த அவன் வீட்டின் அருகாமையில் பெட்டி கடை நடத்து சேகர் அண்ணா "தம்பி பொன்னம்மா வந்திருந்தா இந்த துண்டு கடிதத்தை உன் கிட்ட குடுக்க சொல்லி போய்டாவென" கூறி அக்கடிதத்தை கொடுத்தார் அவனுக்கு. அவர் அளித்த அக்கடிதத்தை வாங்கி பாக்கெட்டில் திணித்துக்கொண்டான் காந்திராம்...

பாயில் படுத்தவனால் தூங்க முடியவில்லை எப்போது விடியும் ? எப்போது போராட்டத்துக்கு போக போகிறோம்? எப்போது கைதாக போகிறோம்? ச்சை இந்த இரவு மட்டும் ஏன் ? இத்தனை நீளம் என சலித்துக்கொண்டு புரண்டு படுத்தவன் கையில் தட்டுப்பட்டது பொன்னம்மா கொடுத்திருந்த கடிதம்...

யார் இந்த பொன்னம்மா?

காந்திராமின் காதலி.

பலமுறை அவளது காதலை அவன் தட்டிக்கழித்தும் விடாமல் அவனை இறுக பிடித்துக்கொண்டவள் . இந்திய திருநாட்டின் சுதந்திரத்திற்கு பின் தான்

திருமணம் என திட்டவட்டமாய் அவன் கூறியும் அது போதும் எனக்கூறி அவனை விடாது பற்றிபிடித்தவள் கடிதத்தை திறந்து படித்து பார்த்தான் அவன் அதில் எழுதியிருந்தது...

"நீங்கள் நாளை போராட்டத்திற்கு போக தீர்மானித்திருப்பீர்கள் என்பது எனக்கு தெரியும் . போனமுறையே சொல்லியிருந்தீர்கள் அடுத்த முறை நாட்டிற்காய் எவ்வகையிலேனும் போராடுவது உறுதியென. உங்களுடன் மணமாலையுடன் மணவறையை மட்டுமல்ல கையில் போராட்ட பதாதைகளுடன் போராட்ட களத்தையுமே சுற்றி வர விரும்புகிறேன். நீங்கள் எங்கு சென்றாலும் என்னையும் உடன் அழைத்து செல்லவும்"

இப்படிக்கு,

"பொன்னம்மா"

என்ன பெண் இவள் ?! இவள் அழகில் மயங்கி எத்தனை பேர் இவள் பின்னே சுற்றியும் இவள் ஏன் என்னை சுற்றி சுற்றி வருகிறாள்? வளமான வசதியான வாழ்க்கை அவள் கண் முன் இருந்தும் கரடுமுரடான என்னுடைய பாதையை ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும் இவள் ? பெண்கள் விநோத பிறவிகள் என்பது உண்மை தான் "எளிதில் ஒருவனை விரும்ப மாட்டார்கள் விரும்பினால் ஆயுசுக்கும் அவனை மறக்க மாட்டார்கள்".

என எண்ணிக்கொண்டே பொன்னம்மாவின் கடிதத்தை மார்போடு கட்டியணைத்தபடியே தூங்கி போனான்...

தன்னுடைய ஜனனம் முதல் பூமியில் பற்பல கொடுமைகளை தன்விருப்பமின்றியே கண்டுகொண்டிருக்கும் ஆதவன் மீண்டுமொரு கொடுமையை காண வந்துதித்தான் கிழக்கினில் .

மார்த்தாண்டம் வெட்டுமணி சந்திப்பு வழக்கம் போல் பரப்பாகவே இயங்கி கொண்டிருந்தது . அருகில் இருந்த கோயிலில் வெடிவழிபாடு இனிதே நடந்து கொண்டிருந்தது. ஆலயமணிகளும் ஆங்காங்கே வாங்கூதும் சத்தங்களும் கேட்ட வண்ணம் இருந்தது...

ஒற்றை ஒற்றையாய் வந்து சேர்ந்திருந்தனர் தேச பக்தர்கள். யாரும் எதிர்பார்த்திராத நேரத்தில் மறைத்து வைத்திருந்த பதாதைகளுடன் வான்வரை எட்டும் குரலில் ஒட்டுமொத்தமாக "மகாத்மா காந்திக்கு ஜே" "பாரத் மாதாக்கி ஜே " "வந்தே மாதரம் " போன்ற கோஷங்களை எழுப்பியவாறு ஆர்பாட்டத்தை துவங்கினர். போராட்டகாரர்களின் முன்னால் காந்திராமும் பொன்னாம்மாவும் கரம் கோர்த்தபடி கோஷங்களை முழங்கிக் கொண்டிருந்தனர்...

சிறிது நேரத்திற்குள்ளாய் ஆங்கிலேயரின் அரக்கபடை வந்து சேர்ந்தது . ஆர்ப்பாட்டகாரர்களை கலைந்து போக சொல்லி வானை நோக்கி சுட்டனர் . சட்டைகளை கிழித்துக்கொண்டு நெஞ்சை விரித்து காட்டியபடி இங்கே சுடுவென சுதந்திர வெறியோடு வெள்ளையனை நெருங்கி சென்றனர் அவர்கள் . வெள்ளையன் ஒருவன் வாயின்று புறப்பட்டது லத்தி சார்ஜ் எனும் அவ்வகோர வார்த்தை . அடிவிழ துவங்கியதும் புறாக்கூட்டத்தில் விழுந்த கல் போல கூட்டம் சிதற துவங்கியது . வலியின் முன்னால் அவர்கள் துணிவு தோற்று போனது . ஆனால் காந்திராமும் பொன்னம்மாளும் பிடித்திருந்த தங்கள் கரங்களை விடவும் இல்லை நின்ற இடத்திலிருந்து ஒரு அடி கூட நகரவும் இல்லை...

கோபமாக அடித்தான் கோஷத்தை அவர்கள் நிறுத்தவேயில்லை.

வேகமாக அடித்தான் வெள்ளையன் வெறிபிடித்தவர்கள் போல் நின்றுகொண்டிருந்தனர்

அவர்கள்.

அவன் கை வலிக்க வலிக்க அவன் வெறி அடங்கும் வரை அடித்தான். அசரவேயில்லை அவர்கள்.

அடியின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க அவர்கள் கோஷம் எழுப்பும் சத்தமும் அதிகமானதே ஒழிய அசங்கவில்லை அவர்கள் நின்ற இடத்திலிருந்து.

அவனது மிதிக்கு அவன் ஷூ வின் கீழிருந்த லாடவும் அழுதிருக்கும்.

அவன் அடித்த வேகத்தில் லத்திகள் முறிந்து தெறித்தது. கூடவே அவர்கள் எலும்புகளும்.

அவனது வெள்ளை உடல் அவர்களது இரத்தத்தில் சிவந்தது.

இறைவன் அவர்கள் மனதிற்கு அளித்த வலிமையில் நூறில் ஒருபங்கையாவது அவர்கள் உடலுக்கும் கொடுத்திருக்க கூடாதா?

கொடுத்திருந்தால் இரு இளம் உயிர்கள் இப்படி அனியாயமாய் மாண்டுருக்காதே.

கரங்களை கோர்த்தபடியே

இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து சிரித்தபடி தரையில் சாய்ந்து பாரதத்தாயின் மடியில் பாரததாயின் சுதந்திரத்திற்காய் தங்கள் இன்னுயிரை சமர்ப்பணம் செய்தனர்...

அதைபார்த்து கொண்டு ஓடிய குழித்துறை தாமிரபரணி ஆறும் ஓவென்று அழுதுகொண்டே ஓடிற்று.

அருகாமையில் கோவில்களில் அமர்ந்திருந்த சாமிகளும் முகத்தை வேறுபக்கமாய் திருப்பி கொண்டன...

தனது செய்தி பத்திரிக்கையின் ஒரு ஓரத்திலாவது வருமாவென ஏங்கியவனின் செய்தி தலைப்பு செய்தியாகவே வந்தது. அவர்களை குறித்து அவர்கள் சுதந்திர தாகத்தை குறித்து, அவர்கள் காதலை குறித்து, பல பத்திரிக்கை ஆசிரியர்களும் , பல பத்திரிக்கைகளில் எழுதினர். காந்திஜியும் எழுதினார் கட்டுரையொன்று "ஆங்கிலேயனின் அழிச்சாட்டியங்கள்" எனும் தலைப்பில் அவர்களை குறித்து...

மறுநாள் மகாத்மாவின் ஆசிரமத்தின் வழக்கமான காலை பிரார்த்தனை கூட்டம் விசேசமாய் அவர்களுக்காய் நடத்தப்பட்டது . வெள்ளையனுக்கு எதிராக துவங்கிய உண்ணாவிரத போராட்டத்தை முடித்துக்கொண்ட அவன் போற்றிய மனித கடவுள் மகாத்மா காந்தியடிகள். அவர்களுக்காக ஒரு நாள் உண்ணா நோன்பிருப்பதாக அறிவித்தார். பிராத்தனையின் முடிவில் அம் மகா ஆத்மாவின் கண்களிலிருந்து இருதுளி கண்ணீர் விழுந்தது அவர்களுக்காக அவர்களின் தியாகத்திற்காக...

ஐயோ!

இது கூடாது!

கூடவே கூடாது!

நீங்கள் அழக்கூடாது உங்கள் கண்ணீர் இந்த அபலைகளுக்காக சிந்த கூடாது.

இந்தியாவின் சொத்து நீங்கள்.

இளைஞர்கள் மனதில் விழுந்த வித்து நீங்கள்.

என கத்தியபடியே அவர் கண்ணீரை பிடிக்க ஓடுகின்றனர் காந்திராமும் பொன்னம்மாளும்.

அவரது கண்ணீர் அவர்களது கையில் சிக்க வில்லை.

அவர்கள் கத்தியதும் எதுவும் அவர் காதுகளில் விழவில்லை.

பிராத்தனை கூட்டத்தை முடித்து எழும்பி நடக்க துவங்கினார் அம்மகான் . ஓடிச்சென்று இருவரும் அவர் பாதங்களை தொட்டு வணங்கினர்.

அதையும் அவரால் உணரமுடியவில்லை...

இனி அவர்கள் யாருக்கும் அடிமை இல்லை.

இனி சுதந்திரத்தை அவர்களுக்கு யாரும் கொடுக்க தேவையில்லை.

தாங்கள் பூஜித்த சாமியின் மனதில் இடம் பிடித்தாயிற்று.

உலகில் வேறு யாருக்கும் கிடைப்பதற்கரிய அரும்பெரும் பாக்கியம் அவர்களுக்கு கிடைத்தாயிற்று.

தங்கள் வாழ்வின் பொக்கிஷமாய் மகாத்மாவின் இருதுளி கண்ணீரை சம்பாதித்தாயிற்று.

இப்பிறப்பின் பயனை அடைந்த திருப்தியில் இருவரும் கரம் கோர்த்தபடி அதே புன்னகையுடன் தரையில் கால் பதியாதவாறு நடக்க துவங்கினர்.

இனி அவர்களுக்கு வானமே எல்லை.

அழியா காதலோடு உலகை சுற்றி வர செல்கின்றனர் அவர்கள்.

கூடிய விரைவில் காந்திய வழியில் இந்தியா சுதந்திர காற்றை சுவாசிக்கட்டும் என்ற பிராத்தனையோடு...

## 18. கனவும் காட்சியும்...

நிறைமாத கர்ப்பிணி மாதவியும் அவள் கணவர் பாலுவும் பிரபல ஜோதிடர் நீலகண்ட பிள்ளை வீட்டிற்குள் செல்கையில் மங்களகரமான வீட்டிற்கு செல்வதை போல் மகிழ்ச்சியாகத்தான் சென்றனர் . திரும்பி வருகையிலோ துக்க வீட்டிற்கு சென்று திரும்புவதை போல் முகம் வாடிப் போய் வருகிறார்கள்...

பாலு மாதவி தம்பதியினருக்கு திருமணம் முடிந்து பத்து ஆண்டுகள் ஆகிறது. அவள் கும்பிட்டதில் எந்த சாமிக்கு அவள் கண்ணீரும் வேண்டுதலும் எட்டிற்றோ? மாதவி இப்போது தான் கருவுற்றிருக்கிறாள். பிள்ளை பிறக்க போகும் நேரத்தை குறித்து அறிந்து கொள்ளதான் பிரபல ஜோதிடர் நீலகண்டனிடம் போய் வருகிறார்கள் அவர்கள்...

மகன் பிறந்து வெளிஉலகை காணும் வரை தந்தைக்கு கண்டம் என உலகில் உள்ள கண்டங்கள் ஏழை தவிர்த்து புதிதாய் ஒரு கண்டம் அவனுக்கு இருப்பதாய் கூறி அதை அவன் தலையில் ஏற்றி வைத்ததன் விளைவு தான் இப்போதைய அவர்கள் சோகத்திற்கு காரணம். பொதுவாக பிறப்பது மகனாக இருந்தால் அவனுக்கு மீசை முளைத்த பிறகே தகப்பனுக்கும் மகனுக்கும் இடையே மாட்டி தவிக்க வேண்டும் தாயாக. ஆனால் மாதவிக்கோ இப்போதே அந்த துர்பாக்கிய நிலை வந்துவிட்டதில் வேதனையே அவளுக்கு...

ஜோசியர் சொன்ன கண்டங்கள் அத்தனையும் கட்டுப்பாடுகளாய் பாய்ந்தது கணவனை நோக்கி ...

வேலைக்கு செல்ல தடை. இருசக்கர வண்டி சாவி அவனிடமிருந்து கைப்பற்ற பட்டது . மகனை வயிற்றிற்குள்ளும் கணவனை வீட்டிற்குள்ளும் சிறை படுத்தி கொண்டாள் மாதவி . நாட்கள் சில சென்றன மழலையொன்று இம்மண்ணுலகை காணும் நாட்கள் நெருங்குகிறது...

அப்போதுதான் அவன் துர்சொப்பனம் ஒன்று காண்கிறான். வேலைக்கு சென்ற இடத்திலிருந்து மேலிருந்து தவறி விழுந்து மாழ்வதை போல வந்து தொலைந்தது அம்மாபாதக கனவு ! மனதிற்குள் ஒரு நிம்மதி அவன் தான் வேலைக்கு செல்வதில்லையே ! காலையில் எழும்பியவன் மனைவியிடமும் சொல்லவில்லை தான் கண்ட கனவு பற்றி சொன்னால் இப்போது கிடைக்கும் சுதந்திரமும் பறிபோகும் என்பதும் சொல்லாமலிருப்பதற்கான சுயநல காரணம் தான்...

காலையில் கதிரவனும் பொல பொலவென எழும்பி விட்டான். காதலன் வருகைக்காய் காத்திருந்த காதலி அவன் பார்வை பட்டதும் வெட்கத்தில் முகம் சிவந்து போய் இன்னும் அழகாய் தெரிவதை போல சூரியனின் காதலி பூமியும் அவன் பார்வையில் ஒளி பெற்று பேரழகியாய் மாறிக்கொண்டிருந்தாள் . அந்நேரம் தான் அலைபேசி வழியாக பலிக்க துவங்கியது அவன் கண்ட கனவு...

அவன் முதலாளி தான் அழைத்தது . அவர் “வேறு வழியின்றி தான் உன்னை அழைத்தேன் பாலு . அரை நாள் வேலை தான் வந்து செய்து கொடுத்து விட்டு போ”

என்றார். மறுக்க முடியவில்லை அவனால். கடவுளே இல்லையென்பவரிடம் கண்டத்தையும் கனவையும் பற்றி சொன்னால் காறி துப்புவார் . அது மட்டுமின்றி அவரிடம் தான் வெல்டிங் வேலை பயின்று

கொண்டான். அதன் நன்றிக்கடன் எப்போதும் அவன் மனதில் உண்டு . அத்தகைய காரணங்களால் அவர் அழைப்பை மறுக்க முடியவில்லை அவனால்...

அவரிடம் வருவதாய் சொல்லி விட்டு மனைவியை சமாதானபடுத்தி சம்மதம் வாங்கி விட்டு . வேலைக்கு கிழம்புகையில் வழக்கமாய் அவளுக்கு பரிசளிக்கும் முத்தத்தை அவளுக்களித்துவிட்டு கிளம்பினான் . மனதில் ஒருவித படபடப்பு தொற்றிக்கொண்டது.

வாகனம் எடுத்து முன் சென்றதும் அபசகுனமாய் கரியநிற பூனையொன்று குறுக்கே பாய்ந்தது . திரும்பி பார்த்தான் மனைவி கவனிக்கவில்லை நிம்மதி பெருமூச்சொன்றுடன் ஆழ்மனதில் கனவின் காட்சிகளை சுமந்து கொண்டு தொடர்ந்தான் பயணத்தை...

கொஞ்ச தூர பயணத்திற்கு பின் முதல் ஆச்சர்யம் காத்திருந்தது அவனுக்கு ! கனவில் கண்டது போன்ற காட்சியொன்று வாய் நிறைய வெத்தலையும் , தலையுடன் காதில் அசைந்தாடும் பாம்படமுமாய் கிராமத்து பாட்டியொருத்தி நின்று கொண்டிருக்கிறாள். இப்போது அவன் மனதுக்குள் கேள்விகள் பல கனவில் கண்டது போல பாட்டி லிப்ட் கேட்பாளா?

ஓரக்கண் பார்வையும் ஒரு எதிர்பார்ப்புடனும் கடக்க முயன்றான் பாட்டியை அருகில் சென்றதும் பலித்தது கனவு லிப்ட் கேட்கிறாள் பாட்டி . அவளருகே நிறுத்தினான் தன் இருசக்கர வாகனத்தை பாட்டி ஏறிக்கொண்டாள்.. காத்திருந்தது அவனுக்கு அடுத்த அதிர்ச்சி பின்னால் தென்னையிலிருந்து கோட்டான் ஒன்று 'குக்கூ' 'குக்கூ' என கூவ அதற்கு எதிர்பாட்டு போல அந்த கிரமத்து பாட்டி "கொம்ம பெற்றாளா?!" எனக் கேள்வியாக கேட்க இங்கு நடப்பது கனவா ? இல்லை இது நினைவு தானா ? என்ற குழப்பத்துடன்

வேலைக்கு போக வேண்டுமா? எனும் அவனது மன போராட்டத்தையும் தாண்டி சென்றது அவனது இருசக்கர வாகனம்...

பாட்டி இறங்குவதாய் சொல்கிறாள் காந்தி நகர் பகுதி என்ன ஒரு ஆச்சர்யம்! கனவில் கண்ட அதே இடம் இறங்கி சென்று விட்டாள் பாட்டி . மனக்குழப்பம் அதிகரிக்க வாகனத்தை திருப்பி வீட்டுக்கு செல்ல எத்தனித்தவனின் அலைபேசி இரண்டாம் முறை அடித்தது. அழைத்தது அவன் முதலாளி “எங்கே வந்தாய்?” எனக் கேட்க திரும்பியவன் மறுபடியும் கிளம்பினான் வேலைக்கு...

வேலைக்கு சென்ற இடத்தில் மனதிற்கு சற்று ஆறுதல் முதலாளி கனவில் போட்டிருந்தது சிகப்பு நிற சட்டை இப்போ போட்டிருந்ததோ நீல நிற சட்டை. அவன் கனவில் கண்டது குளோரின் பிளாண்ட் வேலை சொன்னதோ பைப் றேக் ஏரியா சற்று நிம்மதியோடு சென்றான் வேலைக்கு...

நிம்மதியோடு வேலை செய்தவனுக்கு அந்நிம்மதி நெடுநேரம் நீடிக்கவில்லை

அங்கும் அவனுக்கொரு அதிர்ச்சி காத்திருந்தது அவசரமாக சிறிய வேலையொன்று குளோரின் பிளாண்டில் என கூறிக்கொண்டு வந்தார் முதலாளி .. எதேச்சையாக பார்த்தான் அவர் சட்டையை சட்டை சிகப்புக்கு மாறி இருந்தது பயமும் படபடப்பும் தொற்றிக்கொள்ள...

"என்னண்ணே சட்டைய மாத்திருக்கீங்க” என கேட்ட பாலுவிடம்

"அந்த சட்டைல தண்ணி கொட்டீட்டு அதான்” என சாதாரணமாக சொல்லி அவசரமாக கிளம்பி சென்றனர் குளோரின் பிளாண்ட்க்கு அவர் . அவரிடம் மனதை சொல்லவும் முடியாமல் சொல்லாமல்

இருக்கவும் முடியாமல் மனம் குழம்பிய படியே உடன் சென்றான் பாலு.

சற்று உயரத்தில் கொஞ்சம் வெல்டிங் அடிக்க வேண்டும் அது தான் வேலை . அவன் முதலாளி கீழிருந்து மேலே வெல்டிங் ஹோல்டரை தூக்கி போட அவன் பிடித்தது பழுதாக இருந்த கேபிள் பகுதியில் அடித்தது ஷாக்! இதோ அவன் கண்ட கனவு பலித்தது.. கனவில் கண்டது போலவே கீழே விழுகிறான். ஜோசியம் பொய்க்கவில்லை என்றெண்ணியவாறே விழுந்து மூர்ச்சையாகி போனான் அவன்...

மூர்ச்சை தெளிந்து கண்களை மெலிதாய் திறந்தவனை வரவேற்கிறது புதிதாய் பூத்த மழலை கவிதையொன்று. கண் இமைகள் வழிவிட தான் கண்ட முதற்காட்சியே பூமியில் வந்துதித்திருந்த தன் மகவை தான் அதன் அருகில் உடல் முழுதும் வலியும் மனம் முழுதும் மகிழ்ச்சியுமாய் இவன் கண்விழித்த மகிழ்ச்சியில் கண்களில் நீருபூக்க படுத்துகிடக்கிறாள் ஆசைமனைவி மாதவி...

நினைவு திரும்பி எழும்பியவன் மனைவியின் நெற்றியில் அன்பு முத்தம் ஒன்றை பரிசளித்து விட்டு இருகரத்திலுமாக ஆசையாய் தூக்கினான் தன் மகனை அவனையும் அறியாமல் மகிழ்ச்சியில் கண்கள் சொரிந்தது முத்து முத்தாக கண்ணீரை

அன்பு ஜெயித்தது

கனவும் கலைந்து போனது

ஜோசியரின் கண்டமும் கண்டம் விட்டு சென்றது . இப்போது அம்மழலை தன் மொழியில் பசியை சொல்ல துவங்கிற்று அவர்களுக்கு...

## 19. காதல் என்பது...

வாசுவும் சீதாவும் காதலர்கள் அவள் நல்ல அழகு தெளிந்த புத்தி நன்கு படித்தவள் அவன் நல்ல பண்புள்ளவன் ஒழுக்கத்தில் சிறந்தவன் உழைப்பதில் உயர்ந்தவன் நேர்மையானவன் அவன் காவ்ய காதல் பற்றியோ அமரக்காதல் பற்றியோ படித்தறிந்திராதவன் ஆனாலும் காதல் என்னும் பெயரில் அவளை கறைப்படுத்த விரும்பாதவன் அவளும் தெளிவானவள் தான் தனிமையில் சந்திக்க கிடைத்த வாய்ப்புகளை காதலை வளர்த்துக்கொள்ள பயன்படுத்தினார்களேயன்றி காமத்தையல்ல

அவளது வீட்டில் திருமணபேச்சு வந்தது அரசல் புரசலாக இவர்கள் காதலும் அவள் தந்தையின் காதுக்கு எட்டியது அவள் தந்தை "அவனுக்கு சரியான வேலையோ நிரந்தர வருமானமோ இல்லாதவன் அவனை நம்பி எனது மகளை சாப்பாடுக்கு கையேந்தும் நிலைக்கு தள்ள என்னால் முடியாது " ஆகவே இதை எல்லாரும் மறந்துவிடுங்கள் என கறாறாக கூறிவிட்டார்.

இது அவன் காதுக்கும் எட்டியது வருந்தினான் துடி துடித்தான் அவர் மேல் கோபம் கொண்டான் . அவர் மேல் உள்ள கோபத்தில் தாடிவளர்க்கவோ டாஸ்மாக் செல்லவே அவரை ஆள் வைத்து அடிக்கவோ தயாரில்லை அவன். மாறாக அவர்கள் முன் உழைத்து முன்னுக்கு வர வேண்டும் என்ற நெஞ்சுரம் கொண்டான். பாஸ்போர்ட் எடுத்தான் வெளிநாடு செல்ல தீர்மானித்தான்.

வெளிநாடு செல்வதை அவளுக்கு தெரிவிக்க அவள் தினமும் சென்று வரும் சிவன் கோயிலின் கிழக்கே

உள்ள அந்த ஆலமரத்தடியில் காத்திருந்தான். வந்தாள் அவள் விவரத்தை சொன்னான் மகிழ்ந்தாள் கையில் இருந்த சந்தணத்தை அவன் நெற்றியில் போட்டுவிட்டாள் கூடவே ஒரு முத்தத்தையும் கொடுத்து விட்டு சொன்னாள் "நீ போ நிம்மதியாக வேலை செய் ; என்ன பிரச்சனை வந்தாலும் நான் உனக்காக காத்திருப்பேன். இந்த ஜென்மத்தில் நான் உனக்காவே பிறந்தவள் மரணத்தை தவிர வேறு எதுவாலும், யாராலும் உன்னிடமிருந்து என்னை பிரித்துவிட முடியாது." என்ற அவளது உறுதியான முடிவு மற்றும் ஆறுதல் வார்த்தையுடன் ஆனந்தமாய் கிளம்பினான் வெளி நாட்டுக்கு . இரண்டாண்டுகள் இரவுபகல் பாராமல் கடினமாய் உழைத்தான் வீட்டை கட்டினான் சிறிது நிலத்தைக்கூகூட வாங்கிவிட்டான் விடுமுறையில் ஊருக்கு வந்தான் "காலரை தூக்கி விட்டு முறைப்படி போய் பெண் கேட்டான் " சந்தோஷமா கட்டி கொடுத்தார்கள் அவள் பெற்றோர்.

சில வருடங்கள் உருண்டோடியது அவனும் இரு பெண்பிள்ளைகளுக்கு தகப்பனானான் இருந்தாலும் அவன் மாமனார் மேலிருந்த அவன் கோபம் மட்டும் மாறவில்லை. பழைய நினைவுகள் அவன் மனதை விட்டகலவேயில்லை. மாமனாரை மட்டும் விரோதியாகவே பாவித்து வந்தான்.

காலங்கள் உருண்டோடியது இன்று வாசுவின் மகளுக்கு மஞ்சள் நீராட்டுவிழா. ஆம்! அவள் பெரிய மனுசி ஆகிவிட்டாள் . பத்திரிக்கை அடித்து ஊரைகூட்டி சிறப்பாகவே செய்தான் . இன்று என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை என்ன ஒரு ஆச்சர்யம்! வாசு தான் செய்யும் ஒவ்வொரு சின்ன சின்ன விசயங்களையும் கூட தன் மாமனாரிடம் கேட்டு கேட்டே செய்கிறான் தன் தந்தைக்கு கொடுக்கும் அதே மரியாதையை தன் மாமனுக்கும் கொடுக்கிறான்.

என்ன ஆயிற்று இவனுக்கு? இவனது கோபம் என்ன ஆனது?

எப்படி இவனில் இந்த மாற்றம்? இதைபற்றி அவனே அவன் நண்பனிடம் சொன்னதை சொல்கிறேன் நான்.

அவன் சொன்னது இது தான் "அவர் மீது கோவமா தான்டா இருந்தேன் இப்போது நான் நினைத்து பார்க்கிறேன் என்னுடைய மகளை என் நிலையில் அடுத்த வேளை சாப்பாடுக்கு மல்லுக்கட்டிக் கொண்டிருக்கும் ஒருத்தனுக்கு கட்டி குடுப்பேனா என்று இத்தனை ஆண்டு குடும்ப வாழ்க்கையில் புரிந்து கொண்டேன் குடும்பம் நடத்த நல்ல குணம் மட்டுமல்ல பணமும் வேண்டுமென்பதை . வாழ்க்கையின் எதார்த்தம் புரிய புரிய அவர் மீது உள்ள கோவம் கரைந்து அத்தனையும் மரியாதையாய் மாறியது. அவர் தகப்பனாய் மகளுக்கு சரியானதையே செய்திருக்கிறார்'' என்று கூறி முடித்தான்.

நானும் அமைதியாய் போய் மகளுக்கு ஆசியும் வாசுவுக்கு வாழ்த்தும் கூறி அம்மண்டபத்திலிருந்து புறப்பட்டேன் இப்போது எனக்கும் வாசு மீது மரியாதை பன்மடங்கு அதிகரிப்பதை உணர முடிகிறது...

## 20. கள்ளியங்காட்டு நீலி மற்றும் பழையனூர் நீலி ..

மஞ்சள் ப்றேம் போட்ட கறுப்பு கண்ணாடி , கையில் பஞ்சு மிட்டாய் , பையில் தின்பண்டங்களும் , விளையாட்டு பொருட்களுமாய் பாட்டியின் தோள்மீது தலை சாய்த்து கொண்டிருக்கிறேன் நான் . நாங்கள் நீலி கோவில் திருவிழா முடிந்து அரசு பேருந்தில் திரும்ப வீடு திரும்பிக்கொண்டிருக்கிறோம்.

அமர்ந்திருக்கும் அரசு பேருந்து குண்டும் குழியும் நிறைந்த கன்னியாகுமரியின் சாலையில் விழுந்து எழும்பிச் சென்றுகொண்டிருக்கிறது. எங்கள் எதிரே நெற்றிப்பட்டம் அணிந்து அலங்கரிக்கப்பட்ட யானையுடன் கூடிய கோயில் ஊர்வலம் ஒன்று கடந்து செல்கிறது. அதன் பின்னால் அரோகரா கோஷங்களுடன் ஒரு பறக்கும் காவடி செல்கிறது.

எழில் மிகும் எங்கள் குமரியின் சாலையின் இருமருங்கிலும் நாணல் போல் வளைந்து நின்றுகொண்டு சாலைக்கு குடையென நிழல் வளங்கிக் கொண்டிருக்கிறது தென்னை மரங்கள் பல , அவற்றிற்கிடையே அவற்றுக்கு போட்டியாய் சில கமுகு மரங்களும் வானுயர வளர்ந்து நிற்கிறது . காட்டுச் செடிகளுக்கிடையே பூத்துக் குலுங்கும் காட்டுப் புஷ்பங்கள் போல் மரங்களடர்ந்த பகுதியின் இடையிலிருந்து எட்டிப்பார்க்கிறது மாடிவீடுகள் சில. கிழித்துப் போட்ட கவிதைத் தொகுப்பு போல ஆங்காங்கே பச்சை பசேல் என்ற வயல் வெளிகளும் வாழைமர தோப்புகளும் எங்களைக் கடந்து செல்கிறது.

இயற்கையின் செல்லப்பிள்ளை எங்கள் குமரியின் எழிலுறும் இக்காட்சிகள் எவற்றிலும் என் மனம் லயிக்கவே இல்லை.

நான் ஏக்கத்தோடே பாட்டியின் முகம் பார்த்தேன் . பாட்டிக்குப் புரிந்தது நாங்கள் சென்றுவரும் நீலி கோயிலில் வைத்து என்னைப்போல் சிறுவன் ஒருவன் அவன் அம்மாவிடம் நீலி கதை கேட்டு அழுது ஆர்ப்பாட்டம் பண்ணிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன் பாட்டியும் தான் பார்த்தாள் . அக்கதையை அறிந்துக்கொள்ளத் தான் பாட்டியைப் பரிதாபமாய் நோக்குகிறேன் என்பது தெளிவாய் புரிந்தது பாட்டிக்கு. தன் வாயில் நிறைந்திருந்த வெற்றிலை கோழாம்பியை ஜன்னல் வழியே துப்பினாள் பாட்டி , பின்னாலிருந்து ஒரு சத்தம் "யாருயா அது எச்சில் துப்றது, பின்னால மனுசங்க உக்கார வேண்டாமாவென" நாங்கள் கேட்காதது போல இருந்துகொண்டோம். சற்று நேரத்திற்குப் பின் பாட்டி பேச்சை துவங்கினாள்,

"டேய்! அந்தக் கதையெல்லாம் சின்ன பசங்களுக்கு சொல்ல கூடாதுடா பயப்படுவாங்க"

"இல்ல பாட்டி, இல்ல பாட்டி எனக்குப் பயமே இல்ல நீ சொல்லு பாட்டி " எனக் கெஞ்சத் துவங்கினேன். இனி நான் அக்கதையை சொல்லாமல் பாட்டியை விடமாட்டேன் என்பதைப் புரிந்துகொண்ட பாட்டி ஒரு வழியாக,

"கள்ளியங்காட்டு நீலி " கதையைச் சொல்ல துவங்கினாள்...

பெரும் செல்வந்தன் ஒருவன் இருந்தான்.

அவனுக்கு நீலி என்று பேரழகாக பெண் ஒருத்தி இருந்தாள். முற்றத்து வெயில் முகம் பட்டால் வாடிவிடும் தன்மகள் முகம் என்று எண்ணி வீட்டைச்

சுற்றிலும் வெயிலுக்கு வேலியாகத் தோட்டம் அமைத்தான். தன் மகள் பாதம் தரையில் பட்டு அவளுக்கு வலித்துவிடக்கூடாது என்பதற்காக தரை முழுவதும் பட்டுவிரிப்புகள் விரித்தான் வீட்டிற்குள் பளிங்கு சிலைபோன்ற தன்மகள் பாதம் பட பளிங்குக் கற்கள் பதித்தான். பொன்னென, பொக்கிஷமென, தன் உயிரென தன் மகளை நேசித்து வந்தான் அச்செல்வந்தன். அவளுக்குத் தங்கத்தில் ஆயிரம் அணிகலன்கள் செய்து வைத்துவிட்டு , குணத்தில் குபேரன், கொடையில் கர்ணன், அழகில் மன்மதன் என ஒரு ஆண்மகனைத் தேடிக்கொண்டிருந்தான் அவன் தன் மகளுக்காக.

ஓர்நாள் பேரழகான புருசன் ஒருவன் பட்டுத்துணி விற்க அவர்கள் வீட்டிற்கு வந்தான் . அவன் துறு துருவென துடுக்காக இருந்தான். அவன் கண்கள் காந்தம் போன்ற கவர்ந்திழுக்கும் ஒளியை வீசிக்கொண்டிருந்தது. அவன் புன்னகை முன் பொன்னகை எல்லாம் தன் பொலிவை இழந்து கொண்டிருந்தது. அவன் பேச்சே இன்னிசையென ஒலித்துக்கொண்டிருந்தது.

அவன் பட்டு துணிவிரித்து அவளுக்குக் காண்பிக்கையில் அவள் பட்டு போன்ற கைவிரல்கள் அவன் கைவிரல்களில் படப் பட்டென அவர்களுக்குள் காதல் அரும்புகள் மொட்டவிழ துவங்கியது.

தன் தந்தையிடம் சொன்னாள் அவள் , அவனைப் பிடித்திருப்பதாக. தன் தந்தையும் மகளின் விருப்பத்திற்கு மறுமொழி ஏதுமின்றி சம்மதம் அளித்தார். அவர்கள் தேடிய தகுதி அவனிடம் இருப்பதாக உணர்ந்தனர்; மகிழ்ந்தனர்.

“ஏன் பாட்டி ? எவன்னே தெரியாத ஒருத்தன நீலி கைகாட்டினதும் இத்தனை பாசமா வளர்த்த தன் மகள

கட்டிக்குடுக்க அந்த அப்பா எப்படி சம்மதித்தாராம்?'' என ஒரு கேள்வியை கேட்டு வைத்தேன் நான்.

''டேய் பேராண்டி, வந்தவன் பாண்டிய நாட்டில பேர் போன மிகப்பெரிய திருடன். தான் மிகப்பெரிய வணிக குலத்தான் என்று இவர்களுக்குச் சந்தேகம் வராத அளவு சாதித்தான். அதற்கு அடையாளமாய் தான் முன்பு திருடி வைத்திருந்த அரச குலத்து முத்திரை மோதிரத்தைக் காண்பித்தான் உண்மை என்று நம்பினர் அந்த அப்பாவி அப்பாவும், காதலில் விழுந்த அந்த நீலியும்'' என்று கூறி மீண்டும் தொடர்ந்தாள் பாட்டி.

சுபதினமொன்றில் சீரும் சிறப்புமாக ஏழை எளிய மக்களை அழைத்து வயிறார விருந்து வைத்துத் தங்கத்தோரணங்களால் அலங்கரித்த பந்தலில் வைத்து வைரச்சிலை போன்ற தன் மகளின் கரம் பிடித்து மணமுடித்துக் கொடுத்தான் அச்செல்வந்தன்.

புது வாழ்க்கை அவர்களுக்கு புது இன்பத்தைக் கொடுத்தது இணைபிரியா புள்ளிமான்கள் போலும், ஜோடி புறாக்கள் போலும் , துதிக்கை கோர்த்த யானைகள் போலும் இணைபிரியாமல் இன்புற்று இருந்தார்கள் அவர்கள் இருவரும்.

அவ்வின்பத்தின் விளைவாக அவள் கருவுற்றாள் . நிறைமாத சூலியான தன்மனைவியைக் கூட்டிச்சென்று தன் தாயிடம் ஆசிவாங்கி தன் குல தெய்வத்திற்குப் பூஜை புனஸ்காரங்கள் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டான் அவன் . வகிடெடுத்த நெற்றியில் மஞ்சள் குங்குமம் அணிவித்து கன்னத்தில் முத்தமிட்டு தன் தங்க மகளை தங்கத்தால் அலங்கரித்து மாட்டுவண்டி பூட்டி பெருமகிழ்வோடு அனுப்பி வைத்தான் அச்செல்வந்தன் திருடன் என்று தெரியாமல் அவனுடன்.

அவர்கள் பாண்டியநாடு நோக்கி பிரயாணப்பட்டார்கள். இரவினில் நீலிக்கோயில் இருக்கும் இந்த கள்ளியங்காடு பகுதியை அடைந்தார்கள். இப்பகுதியை எட்டியதும் நீலிக்கு பெரும் தாகமெடுத்தது

கள்ளியங்காடு கள்ளிச்செடிகள் நிறைந்த சொட்டு தண்ணி இல்லாத ஊர் . அவளை மாட்டு வண்டியிலிருந்து கீழிறக்கி கள்ளிச்செடி ஒன்றின் அருகே இருந்த பாறையில் அமரவைத்துவிட்டு தண்ணி எடுத்துவருகிறேன் என்று கூறி சென்றான் அவன். தண்ணி எடுக்கச் சென்றவனுக்கு திருட்டு மூளை வேலைசெய்ய ஆரம்பித்தது.

என்று கூறிய பாட்டி கதையை அங்கேயே நிறுத்திவிட்டு வரும் வழியில் வாங்கிவந்த பதநீரை எடுத்துக் குடிக்கிறாள் . எனக்கும் வேண்டுமா என்கிறாள்? “இதை எல்லாம் குடிக்கிற நேரமா பாட்டி இது? நீ கதைய மொத சொல்லு என்கிறேன்” நான்.

மீண்டும் “இருடா ...” எனக்கூறிவிட்டு வாங்கிவந்த கருப்பட்டியை எடுக்கிறாள் சாப்பிட கடுப்பில நான் பாட்டி கையை பிடிச்சிட்டு “ஐயோ பாட்டி , நீ கதையைச் சொல்லு கருப்பட்டிக்கு என்ன நாலு காலா இருக்கு தாவி ஓட அத அப்றம் திங்கலாம்” எனவற்புறுத்திக்கூறச் சலித்துக்கொண்டே மீண்டும் கதையை தொடர்ந்தாள் பாட்டி.

தண்ணி எடுக்கச் சென்றவன் அரவம் போல் அரவமின்றி மெல்ல அடிமேல் அடியெடுத்து வைத்து வந்தான். பாவம் நீலி தண்ணீர் தாகத்தால் நா வறண்டு சுருண்டு போய் படுத்துக் கிடந்தாள் . அந்நேரம் அருகில் கிடந்த ஒரு பாறாங்கல்லை தூக்கி 'படார்' என அவள் தலையில் போட்டான் . வலி பொறுக்க மாட்டாமல் அவள் வயிற்றிலிருந்த குழந்தை அவள் தொடையை கிழித்துக்கொண்டு வெளியே வந்து

விழுந்தது.

என்ற அந்த நொடி 'படார்' என ஒரு பெருஞ்சத்தம் நிலைதடுமாறி நாங்கள் சென்று கொண்டிருக்கும் பேருந்து அருகில் நின்ற கள்ளியங்காடு என்ற தகவல் பலகையில் மோதி நிற்கிறது. நான் ஐயோ நீலி... நீலி... எனக் காட்டு கத்து கத்திக்கொண்டு பேருந்திற்குள் அங்குமிங்கும் ஓடுகிறேன். பேருந்து டயர் பஞ்சர் ஆன அதிர்ச்சியை விட நான் போட்ட கூச்சல் குழப்பம் தான் பேருந்திற்குள் பெரும் அதிர்வலையைக் கொடுத்தது.

எல்லோரும் என்னை குறு குருவென பார்க்க , நான் பாட்டியை பார்க்கப், பாட்டி செய்வதியாது முழிக்கப், பாட்டி சொல்லிவந்த கதையை பின் சீட்டிலிருந்து ஒட்டுக் கேட்டுக்கொண்டு வந்த பழாப்போன ஒருத்தன் போட்டு குடுத்து விட்டான். இந்தப் பாட்டி தான் அந்தச் சின்ன பையனுக்கு நீலி கதை சொல்லி அவன பயமுறுத்தி விட்டாங்க என இப்போது எல்லோர் பார்வையும் பாட்டி பக்கம் திரும்பப் பாட்டி நிலை பரிதாபமாக போய்விட்டது.

அதைத்தொடர்ந்து வந்த காய்ச்சலில் ஒரு வார லீவும், அதை தொடர்ந்து பள்ளி சென்ற இரண்டு வாரமுமாக வெகுவேகமாக வாரம் மூன்று ஓடியிருந்தது . பாட்டி அப்பிரச்சனைக்கு சில மணித்துளிகளுக்கு பின் பேச துவங்கினாள் ஆனால் கதையை பற்றி மட்டும் மூச்சே விடவில்லை.

இம்முறை பாட்டியிடமிருந்து கதையை வாங்க வேறொரு தந்திரத்தை உபயோகப்படுத்த வேண்டியதாகிப்போனது பாட்டி இருக்கையில் தாத்தாவிடம் கதைகேட்டால் பாட்டிக்கு அவ்வளவு ரசிக்காது. எப்படியும் பாட்டி கதை சொல்லிவிடுவாள் எனும் நம்பிக்கையில் தாத்தாவிடம் மெல்ல நீலி கதை கேட்டேன். தாத்தா கொஞ்சம் கோபக்காரர் ஒரே

*வார்த்தையில் சொல்லிவிட்டார் பேய் , நீ குறுக்கக் குறுக்க எதும் கேட்காமல் இருந்தால் நான் கதை சொல்றேன் நீ எதும் கேட்டா அப்போது நிறுத்திடுவேன் என்ற கண்டிசனோட அவரும் ஒரு நீலி கதை சொல்லத் துவங்கினார்.*

*வணிகன் ஒருவன் இருந்தான். அவனுடைய மனைவி தான் நீலி . அவள் அவனுக்குக் குறையொன்றும் வைக்கவில்லை. இருப்பினும் அவன் தாசி வீடு தேடி ஓடுவதை வாடிக்கையாகக் கொண்டிருந்தான்.*

*கண்டித்தாள் அவள், கண்டுகொள்ளவில்லை அவன். கடுமை காட்டினாள் நீலி அந்த கடுப்பில் ஒருநாள் நீலியைக் கொன்றுபோட்டான் வணிகன்.*

*தவறு செய்யாத தன்னைக் கொலைசெய்த வணிகனைப் பழிவாங்க வேண்டும் எனும் எண்ணத்தில் பெரும் பேயாக மாறினாள் நீலி . அதை அறிந்த வணிகன் ஓடினான் மந்திரவாதியிடம். அவன் மந்திர சக்தியுள்ள வாளொன்றைக் கொடுத்து இது உன் கையில் இருக்கும் வரை உன்னை அப்பேயால் ஒன்றும் செய்ய முடியாது என்று கூறி அனுப்பினான் . இவனைப் பழிவாங்க முடியாமல் துடித்தாள் நீலி , அதை பார்த்து சிரித்தான் வணிகன்.*

*காலம் கைகொடுத்தது நீலிக்கு ஒரு நாள் வணிக விசயமாக "பழையனூர்" சென்றான் வணிகன் . அவனைப் பின்தொடர்ந்து சென்ற நீலி ஒரு கள்ளிச்செடியை ஒடித்து அதைக் குழந்தையாக்கி கொண்டாள் பின் தானும் அழகிய பெண்ணுருவம் எடுத்து. அங்கு நியாயம் செல்லும் 70 பேர்கொண்ட வேளாளர் முன் நீலி கண்ணீரோடு போய் நின்றாள் . அவர்களிடம் சொன்னாள் ‘‘இவர் என் கணவர் தாசி மோகம் கொண்டு கட்டிய மனைவியை கைவிட்ட கனவான்’’ என்றாள். குழந்தையும் தன் பங்கிற்கு அப்பா என அழைத்து அழுது ஆர்ப்பாட்டம் செய்தது.*

வேளாளர்கள் முழுமையாய் அவளை நம்பினார்கள் . "இவள் பெண்ணல்ல பேய்" என்ற வணிகனை நம்ப அங்கே யாரும் தயாரில்லை.

"இன்று ராத்திரி இங்கே தங்கிக்கொள்ளுங்கள் மீதியை நாளைப் பார்த்துக்கொள்ளலாம்" என்றனர் வேளாளர்கள்.

"அவளுடன் ஒற்றை அறையில் படுத்து உறங்க எனக்குப் பயம்" என்றான் வணிகன் . "நீ எதற்குப் பயப்படுகிறாய்? உனக்குப் பாதுகாப்பாய் நாங்கள் 70 பேர் இருக்கிறோம் உனக்கு ஒன்று என்றால் நாங்கள் அத்தனை பேரும் உயிர்விடுகிறோம்" என்று சத்தியம் செய்தனர் அவர்கள்.

இப்போது நீலி கேட்டாள் "ஐயா தாசி வீடு சென்று வந்தவர் அவர் . நீதியின் மறுரூபமான நீங்கள் நியாயத்தின் அடிப்படையில் எங்களை மீண்டும் இணைத்து ஒரு அறையில் அனுப்புகிறீர்கள் . கையில் கத்தி கொடுத்தா அனுப்புவீர்கள் ? என் மீதிருக்கும் கோபத்தில் அவர் என்பிள்ளையையும் என் கழுத்தையும் அறுத்தால் நான் என் செய்வேன்" என்றாள் கண்ணீரோடு . "அடேய், மனைவி பிள்ளையுடன் படுத்துறங்க கத்தியெதற்கடா உனக்கு இங்கே குடுடா கத்தியை" என வாங்கி சென்றனர் வேளாளர்கள். செய்வதறியாது திகைத்தான் வணிகன் . தன் நடிப்பு வேலை செய்வதை எண்ணி உள்ளுக்குள் சிரித்தாள் நீலி.

காலையில் பிணமாய் கிடந்தான் வணிகன்.

தாங்கள் நீலியின் கண்ணீரால் ஏமாற்றப்பட்டதை உணர்ந்த வாக்குமாறா வேளாளர்கள் தீக்குண்டம் வளர்த்து அதில் இறங்கி தங்கள் உயிரை மாய்த்தனர் . இதையறியாது வயலுக்கு வேலைக்குச் சென்ற ஒரு வேளாளன் மட்டும் தன் கலப்பையால் கழுத்தறுத்து

மாண்டான் என்று வேக வேகமாகக் கூறி முடித்த தாத்தா விறு விறுவென வேகமாக வெளியேயும் சென்று விட்டார்.

திரு திருவென குழம்பிய நிலையில் முழிக்கிறேன் நான்.

பாட்டி எனைப்பார்த்து தன் பொக்கை வாய்திறந்து சிரிக்கிறாள், கையசைத்து அருகில் அழைக்கிறாள் ஓடிச்சென்றேன் இரு கன்னங்களிலும் போதுமான அளவு முத்தம் கொடுத்துவிட்டு கேட்டேன் “ஏன் பாட்டி? ஒரு கதை சொல்லக் கேட்டா எதோ பேச்சுப் போட்டில மொத பரிசுக்கு பேசுறவர போலத் தாத்தா மூச்சுவிடாம சொல்லீட்டு போறாரு. ஒழுங்கா ஒரு கதையே சொல்ல தெரியல, நல்லா கதை சொல்ல தெரிந்த ஒருத்தரையா பாத்து நீ கட்டியிருக்ககூடாது” என நான் கேட்க உள்ளிருந்து அம்மா,

"டேய், அங்க என்னடா சத்தம்?"

"சும்மா, பேசிகிட்டு இருக்கேம்மா"

இது நான்...

நான் கேட்ட கேள்விக்குப் பாட்டி சிரித்தாள்,

“நான், என்றைக்கு தான் பாட்டி நீ தாத்தாவ விட்டு குடுத்துருக்க. அது சரி; அது போகட்டும்; என்ன பாட்டி தாத்தா புது நீலிக்கதை சொல்லீட்டு போறாரு?!” எனப் பரிதாபமாய் கேட்ட என்னிடம்,

டேய் பேராண்டி! நீலி கதை நம்மூரில் மட்டுமில்லடா பல ஊர்ல பல வகையா நீலி கதை சொல்றாங்க இப்போது தாத்தா சொன்னது "பழையனூர் நீலி" கதை இது "பெரியபுராணம்" புத்தகத்தில் சேக்கிழார் இக்கதைபற்றி விரிவாக எழுதியிருக்கார். அப்றம் இந்த காலத்தில் எழுத்து சித்தர் "பால குமாரன்" அவர்கள் "புருசவதம்" எனும் நாவலா

எழுதிருக்கார்டா நீ பெரியவன் ஆனதும் வாங்கி படிச்சுக்கோ என்றாள் பாட்டி.

இருபுறமாக ஆர்வமாகத் தலையசைத்துக்கொண்டேன் நான் . அப்றம் திருநெல்வேலி மாவட்டம் தென்காசிக்கு அருகே உள்ள "பழவூர்" எனும் கிராமத்தில் இசக்கியம்மன் எனும் பெயராலும் இக்கதை சொல்லப்படுகிறது . கன்னடத்தில் "கரிராஜன்" கதைன்னும் கேரளத்தில் "இரட்சசி" கதைன்னும் சொல்லபடுதுடா அப்றம் நம்ம ஐங்குறும் காப்பியத்தில் ஒன்றான "நீலகேசி" கூட நீலிகதைய மையப்படுத்திச் சொல்லப்பட்டது தாண்டா அதையும் நீ பெரியவன் ஆனதும் படிச்சு தெரிஞ்சுக்கோ எனச் சொல்லி,

விட்ட இடத்திலிருந்து கதையை பாட்டி துவங்கும் நேரத்தில் அம்மா எனை அழைக்கிறாள், அம்மாவிற்கு உதவியாக சிறு சிறு வேலைகள் செய்வதற்கு . வேலையை முடித்து வந்த நான் பாட்டியிடம் கேட்டேன் ‘‘ஏன் பாட்டி? இந்த அம்மாக்கள் எல்லாம் பாட்டி போலப் பாசமா இருக்குறதே இல்ல எப்ப பாரு நொய் நொய்ன்னு எதும் வேல சொல்லீட்டே இருக்கங்களே எனச் சலித்துக்கொண்டே , பாட்டி கொஞ்சம் கூட மீச மட்டும் எனக்கு மொளைக்கட்டும் அப்றம் மொத வேலையா அம்மாவ எங்கயாச்சும் கொண்டு போய் விட்டுவிட்டு வாறேன்’’ என்றேன்.

உள்ளுக்குள்ளிருந்து மீண்டும் அம்மா

"அங்க என்னடா சத்தம்?"

"சும்மா, பேசிகிட்டு இருக்கேன்மா"

இப்போது பாட்டி சிரிக்கிறாள் ‘‘ஏன் பாட்டி சிரிக்கிற?’’ என்றதற்குக் ‘‘கதை கேட்டு முடிச்சதும் நீ அம்மா புள்ளையாகிடுவ நான் உனக்கு சப்போர்ட் பண்ணி என்னோட சோத்துல மண்ணள்ளி

*கொட்டவா?'' ''நீ ஏன் பாட்டி பயப்படுற இவங்கள விடு பாட்டி இவங்கள விட உன்னையா நான் நல்லா பாகத்துப்பேன்'' எனச் சொல்ல,*

*உள்ளுக்குள்ளிலிருந்து மீண்டும் அம்மா,*

*"அங்க என்னடா சத்தம்?"*

*"சும்மா பேசிகிட்டு இருக்கேன்மா"*

*என்றபடி பாட்டியை பார்த்துச் சிரிக்க இது உனக்குத் தேவையா? என்பது போல் பாட்டி எனை ஒரு பார்வை பார்த்துவிட்டு கதையை சொல்ல தயாரானாள். மீண்டும் சிரித்துக்கொண்டே பாட்டியின் மடிமீது தலை வைத்து படுத்துக்கொண்டேன். பாட்டி தன் கரத்தால் மெலிதாக எனக்குத் தட்டிக்கொடுத்துக்கொண்டே கதைசொல்லத் துவங்கினாள்.*

*பாட்டியின் கதை கேட்கத் தென்றலுக்கும் ஆசை வந்தது போலும் எங்கிருந்தோ எங்களைத் தேடி வந்து எங்களைத் தீண்டியபடி அங்கேயே சுற்றி சுற்றி நிற்கிறது. திறந்திருந்த கதவிடுக்கின் வழியே நிலவும் பாட்டியின் கதை கேட்கும் ஆவலில் பாட்டியையே உற்று பார்த்துக்கொண்டிருக்கிறது . திறந்து மூடிக்கொண்டிருந்த சாளரம் வழியே சில நூறு நட்சத்திரங்களும் பாட்டியின் கதை கேட்கத் துடி துடித்துக்கொண்டிருக்கிறது.*

*எங்கள் வீட்டுப் பூனை ஒன்றும் பாட்டி கதைகேட்க என்னருகே வந்து அமர்ந்து கொண்டது . கூட்டுக்குள்ளிருந்த சில கிளிகளும் தங்கள் கிண்ணர பேச்சுக்களை நிறுத்தி விட்டு இங்கேயே செவிமடுத்துக் கொண்டிருக்கின்றன . சுவரில் சில பல்லிகளும் பகுமானமாகப் பாட்டி கதையை ரசிக்க தயராய் இருக்கிறது . அடுக்களையில் எந்தவித சப்தமும் இல்லை நிசப்தம் குடிகொண்டிருக்கிறது*

அம்மாவும் காதை கூர்மையாக்கிக்கொண்டு பாட்டியின் கதையை கேட்கிறாள் என்பது புலனாகிறது. ஊரின் கடைசி வீட்டில் கேட்கத் துவங்கிய நாயின் ஊளைச்சத்தம் எங்கள் வீட்டு நாயுடன் அடங்கி இருந்தது.

பாட்டி என்னிடம் ‘‘கதையை எங்கேடா விட்டேன்’’ என்றாள். ‘‘அந்த பொல்லாத திருடன் தலையில் கல்ல தூக்கி போட்டுக் குழந்தை வெளியே வந்து விழுந்த இடத்தில்’’ என்றதும், மிச்ச கதையை சொல்லத் துவங்கினாள் பாட்டி ... அவன் கல்லை தூக்கி போட்டதும் துடித்தெழுந்த நீலி அருகில் நின்ற கள்ளி செடியை நோக்கி "கள்ளியே! இதற்கு நீயே சாட்சி " என்று கூறி தன் இன்னுயிர் விட்டாள் . அவள் வயிற்றில் இருந்து தொடை வழி வெளிவந்த குழந்தையோ அழுதுகொண்டு சில நிமிடத்தில் மாண்டது. அந்தக் கொலைகார திருடன் மகிழ்ச்சியோடே அவளது நகைகளையெல்லாம் எடுத்துக்கொண்டு தன்னுடைய ஊர் சென்றுவிட்டான்.

‘‘அப்றம் என்னாச்சு பாட்டி?’’

பெருந்தாகத்தோடு இறந்த நீலியின் உடல் மக்கி மண்ணாய் போனது.

அவளது அத்தாகம் அவளை பெரும்பேயாக மாறச்செய்தது. அதன் பின் அங்கேயே சுற்ற துவங்கினாள் நீலி . அடுத்து இரவு நேரங்களில் அவ்வூரைத் தாண்டி செல்லும் வணிகர்களிடம் "இந்த வெற்றிலைக்குச் சுண்ணாம்பு இருக்கிறதா ?" என்று கேட்பதும் சுண்ணாம்பு கொடுப்பவர்களின் கைவிரலை வெள்ளரி பிஞ்சை கடித்துச் சாப்பிடுவது போல் கடித்து சாப்பிட்டுவிட்டு அவர்களைக் கொன்று அவர்கள் ரத்தம் குடிப்பது அவளது வாடிக்கையாகப் போனது.

*“அப்போ, நீலியைக் கொன்றுவிட்டு சென்ற வணிகன் என்ன ஆனான் பாட்டி?”*

*அவன் சொந்த ஊர் போய் நீலியின் நகைகளையெல்லாம் விற்று புதிய வணிகம் செய்து பெரும் செல்வந்தனாய் மாறினான் . அவன் வசதிக்கேற்ற பெரிய இடத்துப் பெண்ணை மணமுடித்து செல்வ செழிப்போடே வாழ்ந்து வந்தான் என்றாள் பாட்டி.*

*“அப்போ அவன ஒண்ணுமே பண்ணலியா நீலி ?” என்ற என்னிடம் “அவசரப்படாத சொல்றேன்டா” என்றபடி தொடர்ந்தாள் பாட்டி...*

*விதி யாரை விட்டதுடா பேராண்டி ஒருநாள் மனைவியையும் கூட்டிக்கொண்டு வியாபார விசயமாக இவ்வூரைக் கடந்து சென்று கொண்டிருந்தானாம் அந்தத் திருடன் . இவ்வூரில் வைத்துத் தான் ஒரு கொலை செய்திருக்கிறோம் என்பது சுத்தமாய் மறந்து போனது அவனுக்கு.*

*அப்போது வழக்கம் போல் அழகியாய் மாறிய நீலி வந்து நின்றாள் அவ்விடம் . அவளைக் கண்டதும் சபலம் வந்தது அத்திருடனுக்கு.*

*"நீ யார்? எங்கே போகணும் என்றான்?"*

*அவள் தந்தை பெயரைச் சொன்னாள் , தன் கணவன் தன்னை இங்கே இருக்கச் சொல்லி சென்றதாகவும் வெகுநேரமாக அவனை காணவில்லை என்பதாகவும் சொன்னாள்.*

*"உன் தந்தையை எனக்கு நன்றாகத் தெரியும் நான் உன்னை அங்கு சேர்ப்பிக்கிறேன் வண்டிக்குள் இடம் இருக்கிறது வா என்று அழைத்தான்."*

*அவள் நடந்தே வருகிறேன் என்றாள்.*

*சிறிது தூரம் சென்றது ஒரு மோகன பார்வையோடே*

"அவள் கேட்டாள் இந்த வெற்றிலைக்குச் சற்று சுண்ணாம்பு கிடைக்குமா?'' என்று. (அந்த காலத்தில் பெண் ஆணிடம் பாலுறவில் ஈடுபடக் கேட்கும் குறிச்சொல் அது ) மனைவியைப் பார்த்தான் பயணக்களைப்பில் நல்ல நித்திரை மயக்கத்தில் இருந்தாள் அவள். "ஓ... தாராளமாக என்றபடி இறங்கி அவளுடன் நடக்கத் துவங்கினான் அவன்'' . அவள் முன்னால் நடந்து சென்றாள் அவள் பின்னழகில் புத்தி பேதலித்தவனாய் அவள் பின்சென்றான் . அவள் உடம்பில் கள்ளி செடியின் முள்குத்தாதது கண்டு "உன் உடலை முள் தைக்காதா ?'' என வினவினான். "இது முள்தைக்கா பொன்னுடல்'' எனக்கூறிக் நகைத்தாள்.

எதோ தவறு நடக்கிறது என்று எண்ணுவதற்குள் ஒரு கள்ளிச்செடி நிற்கும் பாறையினிடம் வந்து நின்றார்கள் அவர்கள் இருவரும். இதை நாம் இதற்கு முன்பு எங்கோ பார்த்திருக்கிறோமே என்று யோசித்தவனுக்குச் சட்டென நினைவுக்கு வந்தது நான் அன்று இவ்விடம் வைத்தல்லவா நீலியைக் கொன்றேன் என்று. அந்நினைவு வந்ததும் அவளை விட்டு திரும்ப ஓட முயன்றவன் கால்கள் இரண்டும் அசைக்க முடியாமல் மரத்துப் போனது போல் அசைவற்று நின்றுவிட்டது . அவள் சிரிக்க துவங்கினாள் அவள் சிரிப்புடன் ஒரு குழந்தையின் அழுகுரலும் சேர்ந்துகொண்டது.

தாம் வசமாக அகப்பட்டதை உணர்ந்துகொண்டான் அவன்.

நீலி அவனை நோக்கிக் கேட்டாள் இந்தப் பாறை நியாபகம் இருக்கிறதா ? முழித்தான் திருடன் . இல்லையென்றால், இந்த கள்ளிச்செடி சொன்ன சாட்சியாவது நியாபகம் இருக்கிறதா ? இவ்விடம் வைத்து குற்றமற்ற ஒரு அபலை சிந்திய இரத்தம் நியாபகம் இருக்கிறதாடா ? என்றபடி கோபத்தில்

இரையைத் தூக்கிச்செல்லும் கழுகுபோல அவனை அப்படியே தூக்கி எடுத்து ஆகாயத்துக்குக் கொண்டு சென்றாள். ஒரே அடி மண்டைக் கழன்றது மூளையை எடுத்து அப்படியே உண்டாள். அவன் ரத்தத்தில் நீராடி மகிழ்ந்தாள். அவன் நிணத்தை எடுத்து தன் கருங்குழலில் நீவி முடிந்து கொண்டாள் . அவன் எலும்புகளை எடுத்து அவன் தோலில் கட்டி மாலையாகக் போட்டுக்கொண்டாள் . மிச்சமிருந்த அவன் மாமிசத்தை உண்டு செரித்து தன் வெறியை தீர்த்துக்கொண்டாள் என்று கூறி பாட்டி முடித்தாள் கதையை...

கதை துவங்கையில் பாட்டியின் மடிமீது தலை வைத்து படுத்து கிடந்த நான் இப்போது கதை முடிகையில் பாட்டியின் தோள்மீது படுத்து கிடக்கிறேன் என் காதுகளில் சன்னமாய் கேட்கிறது ஒரு கொலுசு ஒலி சத்தமும் உடன் மெலிதாய் குழந்தையின் அழுகுரலும் மெல்ல மெல்ல அச்சத்தம் என் காதுகளை விட்டகல்கிறது இப்போது வீட்டிற்கு வெளியே நாயின் ஊளைச் சத்தம் துவங்கியிருந்தது முன்பு பாட்டி சொல்லியிருக்கிறாள் பேய் பிசாசுகளைப் பார்க்கும் சக்தி நாய்களுக்கு உண்டு என. அவற்றை பார்க்கையில் தான் நாய் ஊளையிடும் என்று. ஒரு வேளை... ஒரு வேளை... என் பாட்டியின் கதை கேட்டு விட்டுச் செல்வது அவள் ... அப்பேய்... நீலி தானோ..???

# 21. தோல்வி...

*தோல்வியால் துவண்டு போய் தடுமாறி கொண்டே நடந்து வந்து கொண்டிருந்தான் கஜபதி . இந்த ஓட்ட பந்தயத்தில் ஜெயிப்பதற்காக எத்தனை நாள் காலை தூக்கத்தைத் துறந்திருந்தான் . எத்தனைக் கிலோ மீட்டர் தூரங்கள் ஓடிக் களைத்திருப்பான். மணல் மீது ஓடினால் மூச்சிரைப்பது குறையும் என்றதால் கடற்கரை மணல் மீதும் ஓடி பயிற்சி பெற்றிருந்தான் . குன்றின் மீது ஓடியேறி பயிற்சி பெற்றால் கால்கள் இன்னும் வலுவாகும் என்பதைக் கேட்டு அதையும் செய்து பார்த்தான் . பயிற்சிகள் அத்தனையும் வீணாகவே போயிற்று . ஓரிரு நொடிகள் தான் அதற்குள் அத்தனையும் முடிந்து போயிற்று தன் பயிற்சியும் முயற்சியும் கனவும் கலைந்து போயிற்று.*

*நினைக்க நினைக்கக் கண்களிலிருந்து கண்ணீர் தாரைத் தாரை கொட்டியது கஜபதிக்கு . வருத்தம் விரக்தியாக மாறியது. விரக்தி கோபமாக மாறியது கோபத்தின் உச்சத்தில்*

*இனி எப்போதும் ஓட்டமும் வேண்டாம் அதற்குரிய பயிற்சியும் வேண்டாம் அதனால் வரும் தோல்வியும் வேண்டாம். எத்தனைத் தோல்வி அத்தனைக்கும் சேர்த்து முழுக்கு போட்டவனாய் எதிரே கண்ட ஓடையில் தன் காலணிகளைத் தூக்கி வீசினான்.*

*தோல்வியுடன் வீட்டுக்குப் போக மனமற்றவனாய் ஓடைக்கு அருகில் நின்ற மரத்தடியில் போய் அமர்ந்து கொண்டான். மரத்தின் நிழல் இதமாக இருந்தது . காற்று லேசாக வீசி தாய்ப்பாசத்தோடு அவன் தலை வருடிச் சென்று அவனுக்கு ஆறுதல் அளித்தது.*

*இவை அத்தனையும் சற்று தூரத்தில் நின்றிருந்த*

முதியவர் ஒருவர் கவனித்துக்கொண்டிருந்தார். அவர் அவனருகே சென்று அவன் சோர்ந்து போய் இருப்பதற்கான காரணத்தை கேட்டார். அவன் தன்னுடைய சோகத்தையெல்லாம் அவரிடம் கொட்டித்தீர்த்தான். இனி வாழ்நாளில் தான் ஒருபோதும் ஓட்டப் போட்டிகளில் பங்கேற்க போவதில்லை என நம்பிக்கை இழந்தவனாய் கவலையோடு தன்னுடைய முடிவை திடமாக சொன்னான் அவரிடம்.

அவன் தன்னுடைய கதையைச் சொல்லி முடிக்கும் தருவாயில் அவன் ஓடையில் வீசியெறிந்திருந்த காலணி அவர்கள் நின்றிருந்த இடமருகே நீரின் ஓட்டத்தில் வந்து ஓடையில் சாய்ந்து கிடந்த சிறு கொம்பொன்றில் மோதி நின்றது . அக்காலணியிலிருந்து இறங்கி வந்த எறும்பொன்று அக்குச்சி வழியே கரையில் இறங்கிச் சென்றது.

அவர்கள் இருவருடைய கண்களும் அக்காட்சியைக் கண்டது. இப்போது நேராக அவன் முகத்தைப் பார்த்தார் அந்தப் பெரியவர் அவனால் அவரை நேருக்கு நேர் பார்க்க முடியவில்லை.

இப்போது அவர் அவனைப் பார்த்து சொன்னார் இந்த எறும்பு எத்தனை நேரமாகத் தண்ணீரில் தத்தளித்திருக்கும். எத்தனை நேரமாகப் போராடியிருக்கும். இனி முடியாது என்று சோர்ந்து போய் அமிழ்ந்து விடுவோம் என்று அது அமிழ்ந்திருந்தால் முடிந்திருக்குமே அதன் வாழ்வு . அதைச் செய்யாது தொடர்ந்து நம்பிக்கையோடு முயற்சித்ததால் தானே அதனால் ஜீவனோடு திரும்ப முடிந்தது. நம்முடைய வாழ்வு மாறவும் நிமிடம் போதும்.

முயற்சி என்பது வெற்றி கிடைக்கும் வரை அல்ல முடியாமல் கீழே வீழ்ந்து விடும் வரை அதைத்

தொடர்ந்து கொண்டே இருக்க வேண்டும்.

என்றது தான் தாமதம். எழுந்து நடக்கத் துவங்கினான் கஜபதி அவன் முகத்தில் ஒரு தெளிவு தெரிந்தது . அவன் நடையில் வேகம் இருந்தது. தூக்கி எறிந்த தன் காலணியை எடுத்துக்கொண்டான் . இனி அவன் முயன்று கொண்டே இருப்பான் வெற்றி கிடைக்கும் வரை அல்ல முடியாமல் கீழே வீழ்ந்து விடும் வரை...

## 22. உருகிய இதயம்...

*“இத்தன நாள் என்னைய உருகி உருகி காதலிச்சுட்டு இப்போ இப்டி திடீர்ன்னு வந்து நான் வீட்ல பார்த்திருக்கறவன தான் கல்யாணம் பண்ணப்போறேன் என்னைய மறந்திடுன்னா என்ன அர்த்தம் வனஜா ? என் நிலைமைய கொஞ்சம் யோசிச்சு பார்த்தியா நீ?”*

*“கோகுல் நானும் உன்னைய உண்மையா தான் காதலிச்சேன்... வீட்ல பிரச்சனை நம்ம காதலை அவங்க நிச்சயம் ஒத்துக்க மாட்டாங்க. புரிஞ்சுக்கோ! உனக்கு வீடு இல்ல , நிரந்தர வேல இல்ல, வீட்ல பாத்திருக்கவனுக்கு காரு , பங்களா, சொந்தமா கம்பெனி என எல்லாம் இருக்கு. கொஞ்சம் யோசிச்சு பாரு? வாழுறதுக்கு காதல் மட்டும் போதாது கொஞ்சம் காசும் வேணும்...”*

*“அப்போ பணம் மட்டும் தான் வாழ்க்கையா வனஜா?”*

*“பணம் இல்லாம வாழ்ந்திட முடியுமா கோகுல்?”*

*“என்னை மறந்திட்டு உன்னால சந்தோஷமா வாழ்ந்திட முடியுமா வனஜா?”*

*“ஏன்? ஊர்ல உலகத்துல காலிச்சவன(ள) மறந்திட்டு கட்டினவன்(ள்) கூட யாரும் சந்தோஷமா வாழலையா கோகுல்!”*

*“என்னாலேயும் கோபுரத்துல இல்லேன்னாலும் குடிசைலயாச்சும் உன்னைய சந்தோஷமா, சுதந்திரமா வாழ வைக்க முடியும் வனஜா ஆனா என்னைய விட்டுட்டு மட்டும் போய்டாதடா செல்லம்*

ப்ளீஸ்டா... நீயில்லாம என்னால இனி வாழ முடியாது டா'' என கூறி அவள் கரங்களை பற்ற எத்தனிக்க...

அவள் அவன் கரங்களை தட்டிவிட்டு ரெண்டு ஸ்டெப் பின்னால் சென்று ... ''இந்த வசனமெல்லாம் பேசவும் கேட்கவும் நல்லாருக்கும் . ஆனா வாழ்க்கைக்கு ஒத்து வராது கோகுல் . நீ என்ன காதலிச்சது உண்மைன்னா இனி என்ன தொந்தரவு பண்ணாத. இந்தா நீ கொடுத்த கடிதங்களும் உன்னோட போட்டோக்களும். எனக்கு எதாவது நல்லது பண்ணணும்ன்னு நீ நெனச்சா ! நான் உனக்கு கொடுத்த கடிதங்களையும் என் போட்டோக்களையும் கிழிச்சு தூக்கி தூரப்போட்டுரு என் நினைப்பையும் உன் மனசுலிருந்து அழிச்சிரு'' எனக்கூறி சென்ற "அடுத்த நொடியே, திட நிலையிலிருந்து திரவ நிலைக்கு மாறி , கண்களின் வழியே கண்ணீராய்ச் சொட்டியது அவன் இதயம்."

"சில ஆண்டுகளுக்குப் பிறகு"

''புதிய கம்பெனி ஒன்று துவங்க போறேன் அதுக்கு பணம் தேவைபடுகிறது போய் உங்க அப்பா அம்மா கிட்டேருந்து வாங்கிவா ! வந்தா பணத்தோட வா! இல்லேன்னா அங்கேயே இருந்திடு.'' என வனஜாவின் கணவன் வனஜாவிடம் கூறிவிட்டு , தன்னுடைய பென்ஸ் கார் ஓட்டுநரை அழைத்து ''அம்மாவ கொண்டு போய் அவங்க வீட்ல விட்டுட்டு நீ மட்டும் திரும்பி வா .'' எனச் சொல்லி அனுப்பி விட்டான் . கண்கள் குளமாக காரில் எதிரே வந்து செல்லும் வாகனங்களை வெறித்து பார்த்துக்கொண்டே வாழ்க்கை வெறுத்து போய் செல்கிறாள் வனஜா.

சிக்னல் ஒன்றில் வந்து நின்றது அவள் சென்று கொண்டிருந்த கார். எதேச்சையாய் கண்டாள் தான் அன்று வேண்டாமென்று உதறிய தள்ளிவிட்டு வந்த கோகுலை. அவன் தன்னுடைய *TVS Fifty* பைக்கில்

பின்னால் அவன் மனைவியுடன் அமர்ந்திருக்கிறான் . அவள் அவன் இடையை இறுக்க கட்டியணைத்து அமர்ந்திருக்கிறாள். இப்போது அவள் அவன் காதோரமாய் ஏதோ கிசு கிசுக்கிறாள் . பதிலுக்கு திருப்பி அவன் ஏதோ சொல்ல வெட்கத்தில் சிவக்கிறது அவள் முகம் . அவள் செல்லமாக அவன் முதுகில் தன் நெற்றியால் மோதுகிறாள் . மோதியவள் முகத்தை திரும்பி அவன் பார்க்க அவர்கள் இருவரது முகங்களும் புன்னகையில் அழகாய் மலர்கிறது.

எதேச்சையாய் வனஜா இக்காட்சியை தன் காரிலிருந்து கண்ட “அடுத்த நொடியே, திட நிலையிலிருந்து திரவ நிலைக்கு மாறி , கண்களின் வழியே கண்ணீராய்ச் சொட்டியது அவள் இதயம்."

## 23. கூடா நட்பு

தெளிந்த நீரோடை போல சலனமின்றி போய் கொண்டிருந்தது வளைகுடா நாட்டில் நண்பர்கள் மூவர் தங்கியிருந்த அவ்வறை. தெளிந்த நீரோடையை கலக்கும் சாக்கடை தண்ணி போல அந்த நான்காம் நபர் வந்து சேர்ந்தார் அவ்வறையில்...

அவ்வறையில் தங்கியிருந்த ரெகின் ஏக பத்தினி விரதன் ராம பிரானின் பக்தன் கோயில் காரியங்களில் முன்னின்று நடத்துபவன். ஊரில் தனது வீட்டிற்கு அருகாமையில் உள்ள சிவன் கோயிலில் முக்கிய பொறுப்பில் இருந்தவன்...

இவன் மனைவி மாதவி அவளும் 'ஜாடிக்கேற்ற மூடி போல' ஒழுக்கத்தில் சீதையை ஒத்தவள் ஊருக்கு நடுவே தீக்குண்டத்தில் இறங்கி வந்த அக்கால சீதையல்ல இவள் ‘திருவிழா கூட்டத்தில் வரம்பு மீறிய அம்முறட்டு கைகளுக்கு தன் செருப்பாலே பதிலை கூறிய இக்கால சீதையிவள்.’

புதிதாக அறையை பகிர்ந்து கொண்ட பிரேமுக்கு விபச்சார விடுதி என்பது தன்னுடைய பண்ணை வீட்டு தோட்டம் போல விரும்பும் போதெல்லாலாம் போய் வருவான். போய்வருவதோடு நில்லாமல் அங்குள்ள கதைகளை சொல்வான் ரெகினுக்கு...

பிலிப்பைனி, தாய்லாந்தி கிட்டதட்ட இந்தியாவில் உள்ள அத்தனை மாநில பெண்களும் கிடைக்கும் என்பான். வாய் பிளந்து கேட்கும் இவனிடம் அட ! இது என்ன பிரமாதம் ! விரும்பினால் அரபிகளும் கிடைக்கும் என்பான் . அவர்கள் அழகையும் தன்னுடைய அந்தரங்க லீலைகள் பற்றியும்

*பெருமையாக சொல்லிக்கொள்வான் ரெகினிடம்...*

*இதனிடையில் இவனுக்கு அறிவுரைகள் வேறு "இதெல்லாம் தப்பில்லையாட?" என அப்பாவியாய் கேட்கும் ரெகினிடம் "அட போடா ! ஆண்டவன் நம்மை படைத்ததே மனம் போல மகிழ்ச்சியாய் வாழ தான்டா. தினமும் ஒரே கடைல டீ குடிச்சா போர் அடிக்காது அடிக்கடி மாத்திக்குடிக்கணும் டா" என்பான்...*

*இன்னும் தினமும் "சாதமே சாப்பிட்டா எப்படி அடிக்கடி பிரியாணி கிரியாணி சாப்பிட்டா தானே சுவை வித்தியாசமா இருக்கும். வாழ்க்கை இனிக்கும்" என சும்மா இருக்கும் இவனையும் சொறிஞ்சு விடுவான்...*

*கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்பது போல் ரெகின் மனதிலும் ஆசைகள் அரும்ப துவங்கி பூத்து காய்த்து கனிந்தது. சம்பளம் வந்ததும் ஒருநாள் வருவதாக சொல்லிக்கொண்டான் சம்பளம் வந்தது போகிறதற்கு தயரானான் . ஏதோ ஊரில் திருமணவீட்டிற்கு செல்வது போல் புத்தாடைகளை உடுத்தி கொண்டான் . வாசனை திரவியத்தை தெளித்துக்கொண்டான்...*

*ரெகின் 'நன்கு பழுத்த பனம் பழம் நிறமுடையவன் உதட்டுக்கு சிகப்பு வர்ணம் பூசிக்கொண்டான் நல்ல அண்டங்காக்கா அலகுக்கு சிகப்பு வர்ணம் பூசியது போல' கொ(டுமையான)ள்ளை அழகு...*

*இருவரும் விடுதியை சென்றடைந்தார்கள். ஆடம்பர ஷோபாக்களில் அரைகுறை ஆடைகளுடன் விலை மாதுக்கள் 'எனை எடுத்துக்கொள் எனை எடுத்துக்கொள்' எனும் காந்த பார்வைகளுடன் இவர்களை நோக்கிய வண்ணம் இருக்க பிரேம் மலையாளி ஒருத்தியின் தோள்மீது கைபோட்டு*

சென்று விட்டான். இவன் பளிங்கு சிலை போலிருந்த பிலிப்பைனி ஒருத்தியை தேர்ந்தெடுத்தான் காசையும் கட்டியாயிற்று...

ஆளை தேர்ந்தெடுத்த பின் மனம் குழப்பத்தில் ஆழ்ந்தது. மனைவி கண் முன் தெரிகிறாள் இத்தனை ஆண்டு காலம் மனைவிக்கும் மனசாட்சிக்கும் உண்மையாய் இருந்தோம் ! இப்போது தூரத்தில் இருக்கிறோம் மனைவியோ வேறு மனிதர்களோ அறிய போவதில்லை. ஆனால் நம் மனசாட்சிக்கு பதில்? விலை மாதுவிடம் போனவன் தானே நீ என்று கேலி செய்யாதா! தனிமையை தனதாக்கிக்கொண்டு இத்தவறை மனைவி செய்தால் மனம் ஒத்துக்கொள்ளுமா?

இப்படி எண்ணற்ற கேள்விகளுக்கிடையில் கண்கள் அப்பிலிப்பைனியை நோக்கவும் தவறவில்லை

விரித்து விடப்பட்ட அவளது கூந்தல்..

ஒழுங்கு படுத்தபட்ட அவளது கண் பிரியங்கள்..

தொட்டால் வழுக்கி விடும் வழவளப்பான அவளது கன்னங்கள்..

ஆரெஞ்சு சுளை போன்ற அவளது உதடு ரோஜா இதளின் வர்ணத்தில் பூசபட்டிருந்த உதட்டு சாயத்தில் ஒய்யாரமாய் தெரிந்தது..

உடலோடு ஒட்டிய அவளது ஆடைகளுக்குள் அடங்க மறுத்து திமிறிக்கொண்டு வெளித்தெரியும் அவளது அங்கங்கள். என அவளை பார்க்க பார்க்க மாது போதை தலைக்கேறி முடிவெடுக்க முடியாமல் 'மதிற் மேல் பூனையாக' தவித்தான் ரெகின்...

அதற்குள் அறையை வந்தடைந்தனர் அவர்கள் . கொஞ்சம் பெரிய அறை தான் நான்கு மூலைகளிலும் நான்கு கட்டில் போடப்பட்டிருந்தது .. "கட்டிலுக்கு

வந்து செல்பவர்களின் மானத்தை பாதுகாத்தபடி தலைகவிழ்ந்து தொங்கி கொண்டிருந்தது அழகிய வேலைப்பாடுகளடங்கிய திரைசீலைகள்.'' அவ்வளகிய திரைசீலைகளாலும் அவர்களது முக்கல் முனங்கல் சத்தங்களை தடுத்து நிறுத்த முடியவில்லை. அவ்வறைக்குள் செல்ல எத்தனித்தவனின் காதில் அச்சத்தம் நாராசமாய் ஒலித்தது...

காலை எடுத்து அறைக்குள்ளே வைத்துவிட்டான் அப்போது ஆபத்தாண்டவன் போல் அழைப்பு மணி ஒலித்தது எடுத்து பார்த்தான் மனைவி மாதவி . கை கால் உதறலை கட்டுப்படுத்தி தயங்கியபடியே ''என்னம்மா?!'' என்றவனிடம் சொன்னாள் "ரெண்டு நாளா மனசு சரியில்லேங்க அதான் கோயிலுக்கு போய் பூஜை பண்ணிட்டு வரலாம்ன்னு போறேங்க நீங்க பார்த்து பத்திரமா இருந்துக்கோங்க " எனக்கூறி அழைப்பை துண்டித்தாள்...

ஒரு நிமிடம் தரையை நோக்கினான் இருதுளி கண்ணீர் தரையில் விழுந்தது அது தன் மனதை கழுகிவிட்டு செல்வதை போல் உணர்ந்தான்.

உடனே திரும்பிப்பார்க்காமல் நடக்க தொடங்கினான். பின்னாலிருந்து அப்பிலிப்பைனியின் கொஞ்சும் குரல் கேட்டது "வாட் ஹேப்பண்ட் " பர்ரே (நண்பனே அவளது பாஷையில் ) "கம் ஆன் ... கம் ஆன் ..." என்றழைத்து கொண்டிருந்தாள். தன் உழைப்பு இல்லா காசை விரும்பா அப்பிலிப்பைனி இவனோ சூடு பட்ட பூனை போல திரும்பி பார்க்காமலே சென்று விட்டான்...

போனதும் முதல் வேலையாக அறையை காலி செய்தான் அவனது நட்பை துண்டித்தான்..

பன்றியோடு சேர்ந்த கன்றுக்குட்டியும் மலம் தின்னும் என்கிற உண்மையை உணர்ந்தான் ரெகின்...

## 24. சிலப்பதிகார காப்பியம் குறுங்கதை வடிவில்...

*கோவலனும், கண்ணகியும் செல்வ செழிப்பு மிக்க பெரும் வணிக குடும்பத்தில் பிறந்தவர்கள் . சிறுபிராயத்திலேயே கண்ணகி ஒழுக்கத்திற்குப் பெயர் போனவள் . இளவயதிலேயே தந்தையை விஞ்சும் தனயன் எனுமளவு வணிகத்தில் வென்று பெயரெடுத்த கோவலன், செல்வத்தையும் ஊரில் தனக்கென தனி மரியாதையையும் சம்பாதித்து வைத்திருந்தான். பெற்றோர்களாகப் பார்த்து சுபதினமொன்றில் இருவருக்கும் மணமுடித்து வைத்தனர். இருவரும் ஒன்றுகூடினர், கண்ணகியின் அன்பில் நனைந்தான், அவள் அழகை ஆராதித்தான் , அவள் குணத்தை போற்றினான், குழப்பம் ஏதுமின்றி குதுகலமாகவே சென்று கொண்டிருந்தது அவர்கள் இல்வாழ்க்கை...*

*தெளிந்த நீரோடையில் அமைதியாய் செல்லும் ஓடம் போல அவர்கள் வாழ்வு அழகாக அமைதியாகச் சென்று கொண்டிருக்க அவர்கள் வாழ்வில் மாதவி எனும் நலமுடை நங்கைக் கடந்து வருகிறாள் ! இல்லை..! இல்லை..! அவள் அல்ல, அவள் வாழ்வில், அவள் வழியில் கோவலன் தான் தென்றலாக உட்பிர வேசிக்கிறான், பின்னால் அவள் வாழ்வில் அவளுக்குப் பிரளயம் ஒன்றைப் பரிசு அளிப்பதற்காய்...*

*மாதவி அழகி , ஆடல் அரசி , பண் இசைத்து இன்னிசைப் பாடும் பெண் குயில் . தன்னுடைய பன்னிரண்டாம் வயதில் சோழ மன்னன் தலைமையில் கோவலன் உட்பட*

ஆயிரக்கணக்கானோர் முன்னிலையில் தனது நாட்டிய அரங்கேற்றத்தை நிகழ்த்தினாள் . ரம்பையோ, மேனகையோ, ஊர்வசியோ தான் இச்சோழ மன்னன் முன்னிலையில் நாட்டியம் புரிகிறார்களோ எனும் பிரமை அங்குக் குழுமியிருந்தவர்கள் மனதில் ஏற்படுத்தத் தவறவேயில்லை அவள் நாட்டியம் . பொதுஜனம் அவள் நடனத்தை வெகுவாக ரசித்தது . கோவலன் கண்கள் அவளது அழகையும் ரசிக்கத் தவறவேயில்லை. மக்கள் அவளது நடனத்தில் வியந்தனர், மன்னன் மகிழ்ந்தான் . "தலைக்கோலி" எனும் பட்டத்துடன் ஆயிரத்தெண் கழஞ்சு பொன் விலைமதிப்புள்ள மணிமாலையொன்றைப் பரிசளித்து அவளைப் பெருமைப்படுத்தினான்...

மணிமாலையை வாங்கிச் சென்ற மாதவி அதைத் தன் தோழி கூனியிடம் கொடுத்து இதை வாங்கி யார் எனக்கு அணிவிக்கிறாரோ அவருக்கு நான் உடையவள் ஆவேன் என்று ஊர் முழுக்க அறிவிக்கச் சொல்லி அவளை அனுப்பினாள் . இதிலும் மாதவி தவறேதும் இழைக்கவில்லை . சுயம்வரம் வைத்து தங்கள் மணாளனைக் கைப்பிடிக்கும் அக்காலத்தில் தன் விருப்பப்படி தன் மணாளனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெண்களுக்கு இருந்தது அதையே தான் அவளும் செய்தாள்...

அதை எடுத்துச்சென்ற கூனி வீதியெங்கும் சென்று கூவிக் கூவி அறிவித்தாள் . மாதவியின் மீது ஆசைகொண்ட பெரும் செல்வந்தர்கள் பலரும் அதைக் கேட்டும் கேட்காதது போல கடந்து செல்ல , கோவலன் மட்டும் விதிப் படியோ , இல்லை தன் மதிப் படியோ அம்மாலையை வாங்கி அதை அவளுக்கு அணிவித்து அவளை தன்னுடையவள் ஆக்கிக்கொண்டான்.

பின்பு அவளுடன் கூடினான் . தாளம் தப்பா

வீணையென அவன் மீட்டலுக்கு ஸ்வரம் சேர்த்தாள் மாதவி. அவள் அவனுக்கு இன்பத்தை மட்டுமே பரிசளித்தாள். கண்ணகியெனும் கண்ணியம் மிக்கவளை மறக்குமளவு மாதவி கோவலனிடம் அன்பு பாராட்டினாள்...

மாதவியுடன் கோவலன் கூடிய செய்தி அறிந்தாள் கண்ணகி, உள்ளம் உடைந்தாள், உயிர் மெலிந்தாள், பிரிந்து போனவன் ஒருநாள் திரும்பி வருவான் என்ற அசைக்க முடியா நம்பிக்கையோடே கண்ணீரோடே காத்திருந்தாள். தன் கற்பின் வலிமையால் அவன் பிரிவையும் தாங்கிக்கொண்டாள்...

ஒரு நாள் வழக்கம் போல் பாட்டுப் பாடி , நாட்டியம் ஆடி கோவலனை மகிழ்வித்துக் கொண்டிருந்தாள் மாதவி. கோபமுற்றான் கோவலன் காரணம் தெரியவில்லை மாதவிக்கு. காரணத்தை சொல்லாமல் கொள்ளாமல் அவளையும் கண்ணீர் ஆழ்த்திவிட்டுப் பிரிந்து சென்றான் கோவலன்...

மீண்டும் தேடிவந்தான் கோவலன் கண்ணகியை , வெளிநாடு வேலைக்குச் சென்று திரும்பும் கணவனை கண்ட சராசரி பெண் போல் ஓடிச்சென்று அணைத்துக்கொண்டாள் கண்ணகி . அன்பைப் பொழிந்தாள், அவனுக்குப் பிடித்தது எல்லாவற்றையும் சமைத்துக் கொடுத்தாள் . அவன் இன்பம் ஒன்றே தன் பாக்கியம் என்பதாய் எண்ணி அவனுடன் மீண்டும் மகிழ்ந்திருந்தாள்.

அவன் அழைப்பிற்கு மறுப்பேதும் சொல்லாமல் அவன் சொற்படி தன் தாய் தந்தையரிடம் கூட சொல்லாமல் இருள் பிரியா புலர் பொழுதொன்றில் அவனுடன் மதுரைக்குப் புறப்பட்டாள்...

கோவலன் ஊர்விட்டு சென்றான் என்ற செய்தி அறிந்த மாதவி இதயம் கனத்தது , உடல் மெலிந்தது, கண்கள்

பனித்தது பட படக்கும் பட்டாம்பூச்சி போல் ஆடலும் பாடலுமாக எப்போதும் ஆனந்தமாகச் சுற்றி வந்தவள் கண்ணீரும் கம்பலையுமாகக் கட்டிலே கதியென , கண்ணீரே உணவென, கவலை கடலில் அமிழ்ந்து போனாள். இச்சூழ்நிலையில் அவளைக் காணவந்தார் கோசிகன் எனும் அந்தணன் அவள் துயருக்குரிய காரணம் கேட்டறிந்தார். கோவலன் கோபத்திற்குரிய காரணம் புரிந்தது அவருக்கு . கோவலனைக் கண்டு நற்செய்தியுடன் திரும்பி வருவதாகக்கூறி அவள் எழுதிய ஓலையுடன் கோவலனை காண அவனைத் தேடிச்சென்றார் கோசிகன்...

ஆதவன் வருகைக்கு முன்னால் புறப்பட்ட கோவலன், கண்ணகி சில நாள் பயணத்திற்கு பின் வழியில் கவுந்தியடிகளின் நட்பு கிடைக்கப்பெற்று அவருடன் இணைந்து மதுரையை நோக்கி நடந்து சென்று கொண்டிருந்தனர். கோவலனைத் தேடிவந்த கோசிகன் தான் மாதவியிடமிருந்து வந்திருக்கிறவன் என்பதைக் குறிப்பால் உணர்த்தினான் கோவலனுக்கு. தனிமையில் அவரை அழைத்துச்சென்ற கோவலனிடம் ஓலையை அளித்தான் கோசிகன் அதில் "அறிவில் சிறந்தோரே, எனக்கு இப்பெருந் தீங்கிழைக்க நான் செய்த குற்றம் என்ன?!" என்பதாய் எழுதியிருந்தது

அதைக் கண்ட கோவலனுக்கு அப்பொழுது தான் உரைத்தது...

கறந்த பசும் பாலில் ஏது பிழை இருக்க முடியும்?!

சிரிக்கும் மழலையின் சிரிப்பில் எங்கே குறை இருக்கக் கூடும்?!

பொழியும் பகல் ஒளியில் எதைக் குற்றம் என்று சொல்ல இயலும்?!

பூக்களின் மீதிருந்து வீசும் வாசத்தில் அபத்தத்தைச்

சொல்ல இயலுமா?!

வான்மழையில் எத்துழியை பிரித்து பிழை என்பது?!

மாதவியின் பாடலின் பொருளில் மட்டும் எப்படிப் பிழை இருந்துவிடக் கூடும்?!

அதைப் புரிந்து கொள்ள முடியாதபடி நம் சிந்தை செயலிழந்து போய்விட்டதே என்று வருந்திக் கொண்டிருக்கையிலேயே,

கண்ணகி எனும் அன்பு களஞ்சியத்தின் அன்பு மீண்டும் அவன் சிந்தையினுள் புகுந்து அவனை ஆட்டுவித்து, மேற்கொண்டு மாதவியைக் குறித்து சிந்திக்க மாட்டாது செய்தது...

ஒருநாள் கண்ணகியிடம் சொல்லாமல் கொள்ளாமலே மாதவியை நாடி ஓடினோம் . அவளுடன் மகிழ்ந்திருந்தோம்.

நினைத்தால் வந்து சட்டையை பிடித்து இழுக்கும் தூரத்தில் இருந்தும் வரவில்லை.

கண்ணகி காத்திருந்தாள்.

பொறுமையாக நமக்காக. பிறிதொருநாள் சொல்லாமலே அவள் பள்ளியறை நுழைந்த போதும் ஏன் இங்கே வந்தாய்? என்று கேட்கவில்லை. பொருள் ஈட்டப் பொருள் தேவைப்படுகிறது என்பதை தன் குறிப்பால் உணர்ந்தவள் , உன் தந்தையிடம் மலைபோல் செல்வம் குவிந்திருக்கிறது அதைச் சென்று வாங்கிக்கொள் என்று சொல்லிவிடவில்லை . இல்லையென்றால் என் தந்தையிடமும் கடல் மச்சங்களைப் போல் கணக்கின்றி பரந்து விரிந்து கிடக்கிறது செல்வம் அதைப் போய் வாங்கிக்கொள் என்றும் சொல்லவில்லை...

அங்கெல்லாம் பொருள் கேட்டுச் செல்வது எனக்குக் களங்கம் என்பதைப் புரிந்து கொண்டவள் கணவனே

கண்கண்ட தெய்வமென கொண்ட அக்கண்ணியமிக்க கண்ணகி. என் கௌரவம் தான் தன் மானமெனக்கொண்டாள். உனக்காக உயிரையும் கொடுக்க துணியும் எனக்கு காற்சிலம்பெல்லாம் கால் தூசிக்கு சமம் என்பதைப் போல் நான் கேட்கும் முன்னே கையில் காற்சிலம்போடு வந்து நின்றாள் . கண்காணா தூரத்திற்கு அழைத்ததும் பூவைவிட மெல்லிய பாதம் உடையவள், இதோ என்னுடன் இக்கானகமும், வறண்டப் பூமியிலும் நடந்து தன் கால்கள் கொப்பளங்களாக வீங்க என்னுடன் பயணித்து கொண்டிருக்கிறாள் . அப்பேர்பட்ட உன்னத குணம் கொண்டவளுக்கு எப்படி துரோகம் இழைப்பது. தவறேதும் இழைக்காத மாதவிக்கு என்ன மறுமொழி சொல்வது என இருதலைக்கொள்ளி எறும்பாக செய்வது அறியாது திகைத்து நின்றான்...

அவனது பலமான யோசனையைக் கவனித்து கொண்டிருந்த கோசிகனிடம் மாதவி இப்போது எப்படி இருக்கிறாள்? அந்நல முடை நங்கை எழில் மிகும் ஏந்திழையாள் நலம் தானே ? என்று வினவினான்...

அதற்குக் கோசிகன்,

உன்னைப் பிரிந்த பின்

மாதவி எனும்

அம்மாசிலா மங்கை

உண்ண மறந்தாள்

உறங்க மறந்தாள்

உடைந்து போனாள்

ஆட மறந்தாள்

*பாட மறந்தாள்*

*ரசிக்க மறந்தாள்*

*கண்ணீர் உகுத்தாள்*

*கவலை கொண்டாள்*

*அத்துன்பத்திலும் உன்னை*

*நினைக்க மட்டும் அவள்*

*மறந்திலள் அவளுக்கு*

*நின் மறுமொழி யாது?*

*என்று வினவி நின்றான்...*

*தான் தற்பொழுது செல்லும் பாதையிலிருந்து இனி வழி மாற முடியாது என்ற உறுதியிலிருந்த கோவலன், தன் தவற்றுக்கு வருந்தி , தன் செய்த தவற்றுக்கு மன்னிப்பு கேட்டு , தன் பாவத்தை எல்லாம் மாதவியின் மீது இறக்கி வைத்து அவளுக்கு இப்படியாக ஒரு ஓலை எழுதினான் "தவறேதும் செய்யாத உம் பாதங்களில் விழுந்து தொழுகிறேன் என்னை மன்னித்து விடு" என்று எழுதிய ஓலையைக் கோசிகனிடம் கொடுத்தனுப்பினான் . தான் தவறு செய்யாதவள் என்பதைப் புரிந்து கொண்டானே அத்தொன்று மட்டும் போதும் இனி நரகமே என்றாலும் உனக்காக ஏற்றுக்கொள்ளத் தயார் என உள்ளுக்குள் நினைத்துக்கொண்டு தன் கடமைகளில் கண் ஆனாள் மாதவி எனும் மலர் குணம்உடை மங்கை...*

*கண்ணகி, மற்றும் கவுந்தியடிகள் உடன் கோவலனின் பயணம் தொடர்கிறது . மதுரையை நெருங்கும் தருவாயில் மாதிரி தன் வீட்டில் அவர்களுக்கு அடைக்கலம் அளிக்கிறாள் . அங்கே வைத்து மாதிரியின் மகள் ஐயை கண்ணகிக்கு*

தோழியாகிறாள்...

அங்கிருந்து சிலம்பை விற்க மதுரை புறப்பட்ட கோவலன் பொற்கொல்லனின் சூழ்ச்சியால் நீதிநெறி தவறிய பாண்டியன் நெடுஞ்செழியன் தீர்ப்பினால் கொலைசெய்யப்பட்டது எல்லோரும் அறிந்ததே...

அதுவரை நீதிநெறி தவறா நெடுஞ்செழியன் சிந்தை குழம்பி அவசரப்பட்டு முடிவெடுக்கக் காரணம் அவன் மனைவி கோப்பெருந்தேவியின் ஊடல்...

கோப்பெருந்தேவியின் ஊடலுக்கான காரணம்?

அவளை அருகில் வைத்துக்கொண்டு சபையில் நாட்டியம் ஆடிய பெண்களை ஆகா ஓகோவென நெடுஞ்செழியன் புகழ்ந்து தள்ளியது...

இவ்விடம் ஆண்கள் கவனிக்க..!!

அரண்மனை அந்தப்புரத்தில் வாழும் மகாராஜாவின் மனைவியானும் சரி , குடிசையில் வாழும் மாடசாமியின் மனைவியானாலும் சரி தன்னை அருகில் வைத்துக்கொண்டு அடுத்த பெண்களை புகழ்ந்து தள்ளுவதை எந்தக் காலத்திலும் பெண்கள் விரும்புவதே இல்லை...

இவ்விடம் பெண்கள் கவனிக்க..!!

அற்ப காரணத்திற்கான ஒரு பெண்ணின் ஊடல் மதுரை எனும் மாநகரத்தையே எரித்திருக்கிறது . பெண்களின் அவசியமற்ற ஊடல் அழிவையே தருகிறது இது எக்காலத்திற்கும் பொருந்தும்...

அதன் பின் காற்சிலம்போடு தலைவிரி கோலமாய் கண்ணகி நீதி கேட்டு மதுரை வந்ததும் வளைந்த செங்கோலை தன் உயிரையே கொடுத்து நிமிர்த்திய நெடுஞ்செழியன் கதையும் எல்லோரும் அறிந்ததே...

தன் கண்முன்னே கணவன் இறந்ததைக் கண்ட

கோப்பெருந்தேவி கண்ணகியின் காலில் விழுந்து "எதை இழந்தவர்களும் ஆறுதல் வார்த்தை கூறி தேற்ற முடியும் கணவனை இழந்தார்க்கு ஆறுதல் என்பதேது" என்று கூறி , தன் கணவனை மனதில் நினைத்து கொண்டு நான் உன் மீது கொண்ட ஊடல் என்பது உன் மீது நான் கொண்ட அளவுகடந்த காதலேயன்றி வேறில்லை. நீ என் அருகில் இருந்தால் இதயமின்றி கூட வாழ்ந்துவிடுவேன். உனக்குப் பதில் ஈரேழு லோகம் கொடுத்தாலும் ஈடாகாது இதோ , நானும் வருகிறேன் உன்னுடன் எனையும் உடன் அழைத்து செல் என்று உள்ளத்தில் கூறிக்கொண்டு அவன் பாதத்திலே விழுந்து தன் இன்னுயிரைத் துறந்தாள் கோப்பெருந்தேவி.

மனைவி அருகிலிருக்கவே அடுத்த பெண்களை தேடும் ஆண்களும் , கணவனின் கண் மறைந்ததும் அடுத்தவனை வீட்டில் அழைக்கும் பெண்களும் இவள் காதலை கவனிக்க...

அத்துடன் கோபம் தணியா கண்ணகி மதுரை மாநகரை மூன்றுமுறை சுற்றிவருகிறாள் . சுற்றிவந்துவிட்டு தன் இடப்பக்க முலையைத் திருகிவிட்டெறிந்தாள். விட்டெறிந்துவிட்டு "அந்தணர், அறவோர், ஆக்கள், பத்தினி பெண்கள், மூத்தோர், குழந்தைகள், நோயாளிகள்" இவர்களை விடுத்து தீத்தன்மையை உடைய மற்றவர்களுடன் மதுரையை எரிக்க அக்கினி தேவனுக்கு ஆணையிடுகிறாள். மதுரை நகர் முழுதும் திபு திபு என தீ பற்றி எரிகிறது எங்கும் மரண ஓலம் கேட்கிறது...

அதன் பின் தலைவிரிகோலமாய் ஒற்றை முலையுடன் பதினான்கு நாட்கள் கால் போன போக்கில் சுற்றி திரிந்து இறுதியாக சேர நாடு வருகிறாள் அங்கே வெஞ்சினத்துடன் வேங்கை மரத்தின் கீழ் வந்து நிற்கிறாள். குற குடி பெண்கள் பயந்துகொண்டே

அவளிடம் வந்து அவள் கதையை கேட்கிறார்கள்.

குற குடி பெண்களுக்கு ஆதியோடந்தமுள்ள தன் வரலாற்றைச் சொல்கிறாள். அதன் பின் அவர்கள் கண்முன்பே வானூர்தியில் தேவர்களோடு கோவலன் வந்து அவளை அழைத்துச் சென்றான். கண்ணகியைத் தெய்வமென கூறி அவளை வணங்குகிறார்கள் அவர்கள். இத்துடன் கோவலன் கண்ணகி கதை முடிகிறது...

இச்செய்தி சேர மன்னன் சேரன் செங்குட்டுவன் அறிகிறான். என் நாடு வந்து விண்ணுலகு ஏறிச்சென்ற அப்பத்தினி தெய்வத்திற்கு கோவில் எழுப்புவேன் என்கிறான். அதற்குரிய கல்லை இமயத்திலிருந்து எடுத்துவருவேன் என்று வஞ்சினம் ஏற்கிறான் . எதிர்த்து நின்ற அரசர்கள் அத்தனை பேரையும் வென்று அவர்கள் மூலமாகவே அக்கல்லை எடுத்துவந்து தான் விரும்பியபடியே கங்கை புனித நீரில் நீராட்டி ஒப்பற்ற வடிவிலே பத்தினி தெய்வமாக சிலையாக வடித்தான்...

இத்துர் செய்தி கேட்ட கண்ணகியின் அம்மா கண்ணகிக்காக உயிர் துறந்ததும், கோவலனுக்காக அவன் அம்மா உயிர் விட்டதும், கோவலனின் தந்தை தன் செல்வத்தையெல்லாம் தான தருமம் செய்து துறவறம் ஏற்றதும் இரத்த சொந்தம் எனும் ஒற்றைப் புள்ளியில் கொண்டுவந்துவிடலாம்...

ஆனால், தன்னிடம் அடைக்கலமாக வந்தவர்களுக்கு தன்னால் பாதுகாப்பு அளிக்கமுடியவில்லையே என்று உயிர்துறந்த மாதிரியின் செய்கையை எக்கணக்கில் சேர்ப்பது?!

ஓட்டுப் போட்டவர்களுக்கு துரோகம் மட்டுமே இழைக்கும் அரசியல்வாதிகள் கவனிக்க ..!! நம்பிவந்தவர்களின் நிலைக்காக தன் உயிர்விட்ட

மாதிரியின் கண்ணியத்தை. அப்போது புரியும் உங்கள் இழிச்செயலை எப்பேர் சொல்லி அழைப்பதென...

கோவலன் ஒருநாள் திரும்பி வருவான் தன் துயர் துடைப்பான் என்று காத்திருந்த மாதவி . தன் காதல் கணவன் இறந்த செய்தி கேட்டுக் கதறினாள் . அவனுக்கு முன்பும் அவனுக்கு பின்பும் வேறு ஆடவனை அறிந்திராத மாதவி அவனுக்காகத் துறவறம் ஏற்றாள் . அவர்களுக்குப் பிறந்த மகள் மணிமேகலையையும் துறவறம் மேற்கொள்ள செய்தாள் இச்சிறு வயதில் மணிமேகலை துறவறம் ஏற்றதை எண்ணி சோழ வேந்தனும் புகார் நகர மக்களும் பெருந் துயர் அடைந்தனர்...

இத்துடன் "சிலப்பதிகார காப்பியம்" முடிகிறது...

தன் கணவனுக்காக மதுரையை எரித்தாள் கற்புக்கரசி கண்ணகி. மாதவியும் தன் கணவனுக்காக தன் கற்பின் வலிமையாலேயே துறவறம் மேற்கொண்டு தன் ஆசை, காம, கோப, தாப, குரோதங்களை எரித்தாள். கண்ணகி மதுரையை எரித்தாள் என்றால் மாதவி தன் புலன்களை அடக்க அனுதினமும் தன்னைத்தான் எரித்தாள். கண்ணகியின் செயலுக்கு மாதவியின் செயல் எள்ளளவும் குறைந்ததல்ல . ஆனால் கண்ணகிக்கு கோயில் எழுப்பிய சேரன் செங்குட்டுவன் முதல் இக்காலம் வரையிலும் மாதவிக்கு உரிய மரியாதை கிடைக்கவில்லையென்பதே நிதர்சனம்...

கோவலன் தன் தவற்றை மாதவி தலையில் இறக்கி வைத்துத் தப்பித்தது போல நாமும் மாதவியைத் தவறான கண்ணோட்டத்தோடே பார்க்கிறோம். அது ஒருவேளை இரண்டாம் திருமணம் அழிவைத்தான் தரும் என ஆண்களுக்குப் பாடமெடுக்க மாதவியை பலிகடா ஆக்கிக் கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது எனக்கு . முருகன் வள்ளியைக்

காதலித்து இரண்டாவதாக கரம் பிடித்ததை ஏற்றுக்கொண்டோம் வள்ளியையும் கும்பிடுகிறோம் பூஜிக்கிறோம் தேவானைக்கு வள்ளி சக்களத்தி என ஒதுக்கி விடாமல் இருவரையும் சமமாக கண்ணியத்தோடே நடத்தி வருகிறது நமது தமிழ் சமூகம். அவ்வகையில் மாதவியை இச்சமூகம் வஞ்சிக்கவே செய்தது , இப்போதும் வஞ்சித்துக் கொண்டே தான் இருக்கிறது . கண்ணகிக்கு அருகில் வைத்துப் போற்றப்பட வேண்டிய மாதவி எனும் மாசு மருவற்ற மாணிக்கத்திற்கு உரிய மரியாதை கிடைக்கவில்லை என்பது மட்டும் மறுக்கமுடியா உண்மை...

## 25. முகநூல் கடித போட்டிக்கு எழுதிய கடிதம்...

*(முப்பது ஆண்டுகளுக்கு முன் கர்ப்பிணி மனைவி ஜென்சியை தனியாக விட்டு விட்டு வளைகுடா நாட்டுக்கு வேலைக்கு சென்ற பவுல் எழுதுவதான கடிதம்)*

*அன்புள்ள ஜென்சிக்கு காதலுடன் பவுல் எழுதிக்கொள்வது,*

*நானும் எனது நண்பர்கள் அனைவரும் கடவுள் கிருபையால் நலம் . அது போல் நீயும் நலமென கடவுள் கிருபையால் நம்புகிறேன் . உன்னுடைய கடிதம் கிடைத்தது, நமது தெருவின் கடைசி வீட்டு பாட்டி இறந்ததிலிருந்து நமது வீட்டு மாடு கன்றுகுட்டி ஈன்றது வரை எழுதியிருந்தாய் தகவல்கள் அறிந்ததில் மகிழ்ச்சி.*

*வர வர உன் கையெழுத்து உன்னை போல் அழகாகிக்கொண்டே செல்கிறது. நம்மூர் மருத்துவச்சி வந்து உன்னை பார்த்து குழந்தை வயிற்றில் நலமுடன் இருப்பதாக எழுதியிருந்தாய் கடவுக்கு நன்றி கூறிக்கொள்கிறேன். குழந்தை எட்டி எட்டி உதைப்பதாயும் எழுதியிருந்தாய், உன்வயிற்றில் தலை வைத்து நமது மகளின் மிதிபட கூட ஆசையாக தான் இருக்கிறது எனக்கும்.*

*எந்த குழந்தை என்றாலும் போதும் என்றிருந்தவன் மகள் என எழுதியிருப்பதை குறித்து யோசிக்கிறாயா? எங்கள் அறையில் உள்ள சிவலிங்கம் அண்ணாவின் ஐந்தாம் வகுப்பு மகள் அவருக்கு எழுதிய கடிதம் படித்தபிறகு எனக்கும் மகளே வேண்டும் என்றே*

தினமும் பிராத்திக்கிறேன்.

நான் இங்கே சர்ச் போக தொடங்கிவிட்டேன் ஜென்சி. சர்ச் என்றதும் நம்மூர் சர்ச் போல பெருசா இருக்கும் என்று நினைக்காதே. இது ஒரு சிறிய ஹால் போன்ற இடத்தில் வைத்தே நடக்கிறது. மனதுக்கு ஆறுதலாக இருக்கிறது. இங்கே ஒரு ஆச்சர்யம் என்னவென்றால் சர்ச்க்கு ஆண்களே அதிகம் வருகிறார்கள் . பெண்கள் கொஞ்சமே வந்தாலும் அவர்கள் சம்பளமெல்லாம் எங்களைவிட பலமடங்கு அதிகம் . அவர்கள் கம்பெனில வேலைன்னு சொன்னாலே எங்களை பரிதாபமா பாக்குறாங்க அதொண்ணு தான் கொஞ்சம் கஷ்டமா இருக்கு. மத்தபடி சர்ச் போறது மனசுக்கு அவ்ளவு சந்தோஷமா இருக்கு.

இங்கு என்னைவிட அதிக சம்பளம் வாங்குபவர்களை பார்க்கையில் வராத பொறாமை, மனைவியுடன் கரம் கோர்த்து நடந்து செல்பவர்களை பார்க்கையில் என்னை அறியாதே வந்து விடுகிறது ஜென்சி . எப்போதுமே ஒழுங்கா படிக்காததற்கு நான் வருத்தப்பட்டதேயில்ல, இப்போது வாழ்வில் முதல்முறையா நல்லா படிக்காததற்காய் வருந்துகிறேன். நானும் நல்லா படிச்சு நல்ல சம்பளத்திற்கு வந்திருந்தா உன்னையும் என்னுடனே அழைத்திருக்கலாம் இல்ல.

கடைத்தெரு செல்லும் போதெல்லாம் குங்குமப்பூவை பார்க்கிறேன் அதைப்பாலில் கலந்து குடித்தால் குழந்தை சிவப்பா பிறக்குமாம் அறையில் உள்ள முஸ்தபா அண்ணா தான் சொன்னார். அதை உனக்கு குடுக்க முடியாததில் வருத்தம்.

நாங்க ரூம்ல உள்ள எல்லாருமா சேர்ந்து காசு போட்டு புது டேப்ரெக்கார்டர் ஒன்று வாங்கி இருக்கோம் .

அதுல கிறிஸ்டியன் பாட்டு கூட கேக்க அனுமதிக்கிறாங்க. அது போல சாமி பாட்டும் , இஸ்லாமிய பக்தி பாட்டும் கேக்குறோம் . இங்க யாரும் ஜாதி, மத பேதமே பாக்குறதில்ல. இப்போ நான் மதம் பிடிக்கா மனிதர்கள் கூட பழகீட்டு இருக்கேன். எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா ஜென்சி. இது போல நம்ம ஊரும் இருந்திருந்தா எவ்ளவு அழகா இருக்கும்.

நான் எப்போதெல்லாம் சந்தோஷமா இருக்கிறேனோ அப்போல்லாம் முத்தமொன்னு கேப்பியே ஜென்சி , இத உனக்கு எழுதுற இந்நேரம் கூட நான் ரொம்ப சந்தோஷமா இருக்கேன்.

ரூம்ல சும்மா இருக்குற நேரம் எல்லோரும் ஒண்ணா உக்காந்து பேசுறோம். அப்போ தான் கர்ப்பிணிங்க தினம் ஒரு மாம்பழம் சாப்ட்டா நல்லதுன்னு சிவலிங்கம் அண்ணா சொன்னாரு ... அவங்களுக்கு நெறைய விசயம் தெரியுது ஜென்சி... நீயும் தினம் ஒரு மாம்பழம் சாப்டு சரியா...

போன கடிதத்தில வேலை கொஞ்சம் கஷ்டம்ன்னு எழுதினது தப்பா போச்சுன்னு, நீ அழுதத பாத்தப்புறம் தான் தெரிஞ்சுது, நீ அழுதத எப்டி கண்டுபிடிச்சேன்னு கேக்குறியா? "வேலை ரொம்ப கஷ்டமாங்க" என நீ எழுதியிருந்த இடத்துல உன்னோட கண்ணீர் துளிகளால சில எழுத்துக்கள் பெருத்து போய் இருந்தது...

இப்போ வேலைய மாத்திருக்காங்க, வேலை சுத்தமா கஷ்டமே இல்ல, ஆனா பூரா ஹிந்திக்காரனுங்க, என்ன பேசுறானுங்க ஒண்ணும் புரியல , இனிமே ஊர்ல யாரச்சும் ஹிந்தி படிக்ககூடாதுன்னு வந்தா தமிழனுக்கு தமிழ்நாட்டுலே மொத வேல குடுங்கடான்னு கேக்கணும் ஜென்சி.

இங்க இப்போ பேரீச்சம்பழம் சீசன் பழுக்க துவங்கியாச்சு அதுவும் கொத்து கொத்தா காய்க்குது மரத்திலேருந்து பறிச்சு சாப்ட அவ்ளவு டேஸ்ட் தெரியுமா... அது கொத்து கொத்தா நிக்குறத பாக்குறப்போ, நீ எனக்கு திராட்சைபழம் ஊட்டி விட்டத, உன்னோட வாலு தங்கை பாத்துட்டு , நமைப்பார்த்து சிரிச்சது தான் நினைவுக்கு வருது ... அந்த வாலு இப்போவும் உன்னை பாத்து சிரிக்குறாளா? அவளையும் கேட்டதா சொல்லு...

இங்க எல்லாம் போண் இருக்கு. எனக்கு கூட உன் கூட பேசணும், உன்குரல கேக்கணும்ன்னு ஆசையா தான் இருக்கு, இப்போ தான் கரண்டே வந்த நம்மூருக்கு , எப்போ போண் வந்து , நாம எப்போ தான் பேச போறோமோ ஜென்சி...

இங்க இப்போ ஐம்பத்தி அஞ்சு டிகிரிக்கு மேல சூடு , அதவிட நீ இல்லா இந்த நிலவொளி தான் என்னை அதிகமா சுடுது. நீ அருகில இருந்தப்போ ரொம்ப ரொம்ப சின்னதா தெரிஞ்ச இரவுகள் இப்போல்லாம் ரொம்ப ரொம்ப பெருசா தெரியுது. இனி அஞ்சு வருசம் கழிச்சு தான் உன்ன பாக்க போறேன்னு நெனச்சாலே அழுகையா வருது , அப்போ நமக்கு பிறக்கும் குழந்தை கூட வளந்திருப்பா இல்ல ஜென்சி.

தங்கச்சிங்க கல்யாணம், சொந்தமா வீடு, இருக்குற கடன் இதுங்கள நெனச்சா ஊருக்கு வாறா ஆசையே போயிடுது ஜென்சி ... என்ன ஆனாலும் இதையெல்லாம் முடிச்சிட்டு தான் வருவேன் இது உன்னோட வைராக்கியம் கூட இல்லையா...

ஜென்சி நீ "உன்ன மறக்க மாட்டேன், உன்னைத் தவிர வேற யாரையும் நெனைக்க கூட மாட்டேன்னு " என்கிட்ட சத்தியம் வாங்குனப்போ எனக்கு சிரிப்பு தான் வந்திச்சு ... ஆனா இங்க கூட விபச்சாரம் நெறையவே இருக்கு... உனக்கு கூட நெறைய விசயம்

*தெரிஞ்சிருக்கு... "நீ எனக்கு உண்மையா இருக்கணும்ன்னு நான் நெனைக்குறது போல உனக்கு நானும் உண்மையாவே இருப்பேன் ." எஜமானனின் மனைவி தன் ஆசைக்கிணங்க யோசேப்பின் ஆடையை பிடித்து இழுத்தும் ஆடையை அவளிடம் விட்டுவிட்டு ஓடிய அவனை போல கட்டுப்பாடோடு என்னை நான் பாதுகாத்து கொள்ளுவேன் ஜென்சி...*

*உனக்கு நியாபகம் இருக்கா ? ஜென்சி நீயும் நானும் தனியா போய் சாப்ட கூட வராம, நேரம் போனதே தெரியாம பேசிட்டே இருந்து, அம்மா கிட்டேருந்து வாங்கி கட்டிக்கொண்டது . உன் கிட்ட பேசினா மட்டும் நேரம் போறதே தெரியாது. இப்போ உனக்கு கடிதம் எழுதினா மட்டும் எழுதீட்டே இருக்க தோணுது... இப்பவே என்ன பார்த்து ரூம்ல இருக்குறவங்க சிரிக்க தொடங்கிட்டாங்க மிச்சத்த அடுத்த கடிதத்துல எழுதுறேன். வீட்ல எல்லாரையும் கேட்டதா சொல்லு. அவங்களுக்கும் தனியா கடிதம் எழுதிருக்கேன். அப்பா எனும் உன்னத பதவியை அடைய ஆவலோடே காத்திருக்கேன்...*

*இப்படிக்கு,*

*ஆயிரமாயிரம் முத்தங்களுடன் உன் காதல் கணவன்,*

*பவுல்...*